# இங்கிலாந்து மலர் மருந்துகள்

**பாகம் - 9**

— Random Notes on the Principal uses of Dr. Bach Flower Remedies of England (For doctoral & post-doctoral studies) —

**Life-ல 'சம்திங் ஸ்பெஷல்'**

சளி, காய்ச்சல் போன்ற "வியாதி"களுக்கு அல்ல. மன வியாதிகளுக்கும் அல்ல.

வாழ்க்கைப் பிரச்சினை நீங்கவும், டாக்டர், ஜோஸ்யர்களால் கைவிடப்பட்ட கேஸ்களுக்கு மட்டுமே.

இவை வசிய மருந்துகள் அல்ல. உங்கள் விருப்பப்படி மற்றவர்களை ஆட வைக்க முடியாது.

உங்கள் வாழ்க்கைத் தரம், வருமானம் உயரவும், ஆன்மீக விஷயங்களில் மதத் தலைவர்களைவிட சரியான, பூரண அறிவு பெற.

Dr. V. கிருஷ்ணமூர்த்தி
RAMAN HOUSE,
21, குப்பையா தெரு, சென்னை - 33.
✆ :24890370, 55393214

விலை (குரு தட்சிணையாக): ரூ.87=00

# இங்கிலாந்து மலர் மருந்துகள் - பாகம் 9

— Random Notes on the Principal uses of Dr. Bach Flower Remedies of England (For doctoral & post-doctoral studies) —

## அக்ரிமனி (சண்டை, சச்சரவு)

quarrels, disputes, grace, disgrace

துக்கத்தை மனதிற்குள் சுமந்து அமுக்கி வைத்து கொண்டிருக்கிறார்கள் 'நெகடிவ்' அக்ரிமனி டைப் நபர்கள். பாசிடிவ் தன்மையில், சுகமான அனுபவங்களையல்லவா மனதில் போட்டு நிரப்ப வேண்டும்.

தேன், மல்கோவா மாம்பழம் ஆகிய இரண்டுமே இனிப்புதான். இதை வார்த்தைகளால் சொல்ல முடியுமா? முடியாது. அனுபவித்து பார்த்தால் தான் தேனுக்கும் மாம்பழத்துக்கும் உள்ள தனித்தனி ருசியை அறிந்து கொள்ள முடியும். தேனின் சுவையை எழுத்தில் தெரிவிக்க முடியாதே.

(a) தியேட்டர் வாசலில் ஒட்டி வைக்கப்பட்டுள்ள ஸ்டில் அல்லது சுவரில் ஒட்டப்பட்ட சினிமா போஸ்டரை பார்த்து மகிழ்கிறான் ... ... ... ஸெராட்டோ-டைப்

(b) டிரெய்லர் பார்க்கிறான் ... ... ... ... ... ... வாட்டர் வயலட்

(c) தியேட்டர் உள்ளே உட்கார்ந்து முழு படமும் பார்க்கிறான் அக்ரிமனி டைப் நபர். (படம் ஓடிக் கொண்டிருக்கும் போது எல்லோரும் 'கப்சிப்' என்று இருக்கின்றனர்.)

---

'சடன் பிரேக்' (sudden brake) என்ற வார்த்தை அக்ரிமனி பற்றி புரிந்து கொள்ள உதவும். வாகனம் எவர் மீதாவது மோதி விட்டால் 'குய்யோ முறையோ' என்று அடிபட்டவனும் ரோட்டில் சென்ற மற்றவர்களும் வண்டி ஓட்டிய உன்னுடன் 'சண்டைக்கு' வருகின்றனர். சடன் பிரேக் போட்டு விட்டால் உனக்கு மரியாதை கொடுத்து குறுக்கே வந்தவனுக்கு வசவுகள் கிடைக்கும்.

மற்றவர்களின் வாயை அடைக்க (அவரது ஏச்சு, பேச்சு நமக்கு வராமல் இருக்க) அக்ரிமனி சாப்பிடு.

பிசினஸில் உள்ளவர்களுக்கு அக்ரியனி 'டாப் டக்கர்' ஆக வேலை செய்யும். "கையில காசு வாயில தோசை," "சரக்கு இருந்தால் அவிழ்த்து விடு; இல்லை (என்றால்) சலாம் போட்டு ஓடி விடு."

விவாதம் செய்பவர்களுக்கு அக்ரிமனி.

கோர்ட்டில் இரு தரப்பு வக்கீல்கள் வாதாடுவதை கவனியுங்கள். இரண்டும் சரியான நெகடிவ் அக்ரிமனி டைப் தான்.

வக்கீல்களுக்கு அக்ரிமனி. இதை சாப்பிட சரியான லா பாயிண்ட் பேசி எதிர் தரப்பு வக்கீல் வாயடைத்துப் போகும்படி செய்து கேஸ்களை சுலபமாக ஜெயித்து விடுவார்.

(a) தனது நெருங்கிய 'உறவினர்/நண்பர் நன்றாக இருக்க' வேண்டுமென்று அக்கறைப்படுகிறான் ரெட் செஸ்ட்நட்-டைப்

(b) ராக் ரோஸ்-டைப் 'உலக நன்மைக்காக' பாடுபடுகிறான். (ரேடியம் கண்டு பிடித்த மேரி க்யூரி அம்மையார் போன்றோர்).

(c) ராக் வாட்டர்-டைப் உலக மக்களின் நன்மைக்காக (அவர்கள் செய்யும் பாவங்கள் உலகை அழிக்காமல் இருக்க) அவர்களது 'பாவங்களை வாங்கி சாப்பிட்டு' பஸ்மம் ஆக்கி விடுகின்றான் தனது உண்ணா விரத நோன்பால்.

(d) சிக்கரி (100 சதவிகித பாசிடிவ் டைப் நபர்) மற்றவர்களுக்காக தர்ம சத்திரம், இலவச கல்யாண மண்டபம் கட்டுகிறான்.

(e) வாட்டர் வயலட் டைப் நபர் ஒரு கூட்டத்திற்காக, அல்லது தெருவில் உள்ளவர்களுக்காக நன்மை செய்கிறான்.

(f) அக்ரிமனி-டைப் நபர் உலகிற்கே 'உபதேசம்' செய்கிறான்.

---

True art is to hide art. (நிறை குடம் தளும்பாது.)

---

'கற்றது கையளவு, கல்லாதது உலகளவு என்றால்' நாம் எது பேசினாலும் அது அற்பமாகத்தானே இருக்கும்? அப்படியெனில் நாம் எதற்கு பேசவேண்டும்?

"விஷயம் தெரிந்தவன் பேசமாட்டான்." வளவளவென்று பேசுபவனிடம் (மற்றவர்க்கு சொல்ல, பேச) விஷயம் ஒன்றுமிருக்காது என்று சொல்வர்.

மா, தென்னைமரம் மாம்பழங்களையும், தேங்காய், இளநீர் கொடுக்கின்றன. தினம் தினம் கொடுக்கின்றன. அலுத்துக் கொள்வதில்லை. பேசுவதும் இல்லை.

ஒரு தேங்காய் அல்லது மாம்பழம் கூட உண்டாக்க தகுதியில்லாத மனிதன் சிறிது கூட பேசாத தென்னை, மா மரங்கள் கொடுக்கும் அவ்வளவு தேங்காய், மாம்பழங்களையும் தினம் தினம் சாப்பிட்டு விட்டு இவன் பேசுவதை பார்த்தால், ....அப்பப்பா... இவனே இவ்வளவு பேசுகிறான் எனில் மரங்கள் எவ்வளவு பேச வேண்டியிருக்கும். அவை பேச ஆரம்பித்தால் இவன் வாயடைத்துப் போக வேண்டியதுதான். அப்படியெனில் இப்பொழுதே (மரங்கள் பேச ஆரம்பிக்கும் முன்பே) இவன் வாயை மூடினால் எவ்வளவு கௌரவமாக இருக்கும்? 'இப்பொழுதாவது திருந்துங்கடா!' என்கிறது இயற்கை. [உருவக கதை எழுதுபவர்கள் ஐம்பது சதவிகித மார்க் வாங்கிய அக்ரிமனி டைப் நபர்கள்.]

தனது இயலாமையை நொந்து கொண்டு அதை மூடி மறைக்கத்தான் மனிதன் இவ்வாறு உளறுகிறானோ என்னவோ!

Things would have been far better if all our libraries are burnt down என்ற எமர்சன் எழுதியது சரி என்றே சொல்லத் தோன்றுகிறது.

நறுக்குத் தெரித்தாற்போல் (எதிராளி அதற்கு மறுப்பு சொல்லி விவாதிக்க முடியாதபடி செய்து) பேச அக்ரிமனி.

---

தனது கவலை கஷ்டம் பற்றியே 'அங்கலாய்க்கிறான்' ஹீதர் நெகடிவ்-டைப் நபர்.

தான் செய்தது சரி என்று வாதிடுகிறான் நெகடிவ் அக்ரிமனி-டைப் நபர்.

---

"ஏண்டா உளறிக் கொண்டே உன் மன அமைதியையும் மற்றவர்களின் மன அமைதியையும் கெடுக்கறீங்க? இப்பவாவது இங்கிலாந்து காட்டில் நான் உண்டாக்கி வைத்துள்ள அக்ரிமனி மலரிலிருந்து தயாரிக்கப்படும் மாத்திரைகளை சாப்பிட்டு, எனது உலகில் உள்ள பல நல்ல விஷயங்களை அனுபவித்து உங்கள் மனதை சந்தோஷத்தால் நிரப்பிக் கொள்ளுங்கடா" என்கிறது இயற்கை அன்னை.

Art is long, life short. உலகில் உள்ள எல்லா நல்ல விஷயங்களையும் அனுபவிக்க நமது ஆயுள் போதாது. சண்டை, சச்சரவு, பேரம், விவாதம் என்ற குப்பைகளை மனதில் போட்டு நொந்து கொள்ளாமல் எல்லா இன்பங்களையும் அனுபவிக்க அக்ரிமனி சாப்பிடு

வசையொழிய வாழ்வாரே வாழ்வார்; இசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

---

இன்பத்திலேயே, சுகத்திலேயே திளைக்க அக்ரிமனி. Inner peace. Transcendental meditation.

ஏதோ இவன் வேறு உலகத்திலிருந்து மண், விதை கொண்டு வந்து (அல்லது தானே ஆராய்ச்சி செய்து) உண்டாக்கியது போல் "என் வீட்டு தோட்டத்தில் காய்த்தது" என்று அல்லவா உளறுகிருன்.

இவன் உண்டாக்காததை சொந்தம் கொண்டாடுகிருன். அப்படியெனில் தினம் தினம் நமக்கு பால் கொடுக்கும் (நம்மை குழந்தைப் பருவத்திலிருந்தே வளர்த்து ஆளாக்கிய) பசுக்கள், (தானியங்கள் கொடுக்கும்) செடி, கொடி, மரங்கள் நம்மை எவ்வளவு சொந்தம் கொண்டாட வேண்டும்? ஆனால் அவைகள் ஏதும் பேசவில்லையே. நீ ஏண்டா பேசுகிருய்?

இவனது உளறல்களை கேட்க சகியாதுதான் செடி, கொடி, பசுக்கள் வாயடைத்துப் போய் விட்டனவோ!

பல்வேறு மூலிகைகள் என்னென்ன வியாதிகளை (அவற்றை எப்படி அரைத்து சாப்பிட்டால்) குணமாக்கும் என்று முற்கால (தமிழ்நாட்டு) சித்தர்கள் அவைகளுடன் பேசி தெரிந்து கொண்டனர்.

Psychology of Plants என்ற புத்தகம் வாங்கி படியுங்கள்.

நாம் ஏதும் பேசாமல் ('உளருமல்' என்று எழுதுவதே சரியாக இருக்கும்) இயற்கை, மரம், செடி, கொடி பேசுவதை கேட்டு உன் (துன்பங்கள் அறவே ஒழிய) இன்பங்களை அதிகரிக்க அக்ரிமனி சாப்பிட்டுப் பார்.

தெய்வ தரிசனம், ஆன்ம தரிசனம் உண்டாக ('கிடைக்க' என்று நாம் எழுதவில்லை என்பதை வாசகர்கள் கவனிக்கவும்) அக்ரிமனி. கடவுள் தரிசனம் கிடைத்தால் எல்லாம் கிடைத்த மாதிரி. பிறகு பேசுவதற்கு என்ன இருக்கிறது. அவற்றை அனுபவிக்க வேண்டியது மட்டுமே இருக்கும்.

பொருளாதாரத்தில் (economics) "After a certain higher stage money will make money" என்று சொல்வார்கள். அதாவது முதல் 20-30 இலட்சம் சம்பாதிப்பதுதான் கஷ்டம். அதை சம்பாதித்த பிறகு அதை பன்மடங்காக ஆக்க உனக்கு மனிதர்கள் மற்றும் வழிகள் 'ஆட்டோமேடிக்' ஆக

உன்னிடம் ஓடி வந்து விடுவர். அதன் பிறகு நீ (பணம் சம்பாதிக்க) பேச, உழைக்க வேண்டாம். உனது அந்த 20-30 இலட்சம் பேசும். வேலைகளை செய்யும்.

(a) வைல்டு ரோஸ் டைப் நபரிடம் சென்று கேட்டவுடன் நீ கேட்ட பொருள், பணம் மட்டுமே கொடுக்கிறான்.

(b) வாட்டர் வயலட் டைப் நபர் நீ கேட்காமலேயே உனக்கு அள்ளி பொன் மயமாக கொடுக்கிறான்.

(c) அக்ரிமனியில் எவரிடமும் சென்று கேட்காமல் நீயே உண்டாக்கிக் கொள்கிறாய்.

அந்த 20-30 இலட்சம் (எவரிடமும் கை நீட்டி கேட்டு பெறாமல்) நீயே உண்டாக்கிக் கொள்ள அக்ரிமனி.

"நான் உனக்கு தேவையானவற்றை அக்ரிமனி மூலமாக தருகிறேன் என்கிறேன். என்னைப் பார்க்காமல் ஏண்டா, நான் உண்டாக்கிய மனிதர்களிடம் கேட்கிறாய்?" என்று இயற்கை கடிந்து கொள்கிறது.

[நான் மேலே எழுதியவற்றைப் படித்து பல வாசகர்கள் இயற்கை நம்மை திட்டுகிறதோ என்றும் இயற்கை 'வில்லோ' நெகடிவ் டைப் தானோ என்று சந்தேகிக்க வேண்டாம். குழந்தை தப்பு செய்யும் போது அதன் பெற்றோர் கடிந்து கொள்வது போல் பேசுவதாகத்தான் எழுதி வருகிறோம்.]

ஆன்மீக பிரவசனம், உபன்யாஸம் என்று கடவுள் புகழ் பேசி அங்கு (தனது உடலுக்கு வெளியில்) கடவுளை பிரசன்னம் ஆகச் செய்து அவர் பார்வை தன் மீது விழுந்து (தன்னிடம் பேச) முயற்சிக்கிறான் பாசிடிவ் ஹீதர் டைப்.

தனது உடலுக்குள்ளேயே கடவுளை (ஆன்ம) தரிசனம் செய்கிறான் பாசிடிவ் அக்ரிமனி டைப் நபர்.

சந்தோஷம், திருப்தி, அமைதி என்பது வெளிப்புற பொருட்களால் நமக்கு உண்டாவதில்லை. அவை நம் மனதைப் பொருத்த விஷயங்கள். நமது மனக்கண்ணோட்டம் படிதான் நமக்கு திருப்தி, சந்தோஷம் உண்டாகின்றன. மனக்கண்ணோட்டம் சரியாக அமைய அக்ரிமனி.

---

**[இனி டாக்டர் George C. Mcgrath என்ற எமது இங்கிலாந்து நாட்டு மாணவர் தொடர்கிறார்.]**

ஆன்ம தரிசனம் - ஆத்ம ஸ்வரூப தர்சன போதினி - Self Realization - பெரிய இடத்து சமாச்சாரம், நாமெல்லாம் பேசக்கூடாது.

அக்ரிமனி டைப் நபர் (short and curt ஆக) வார்த்தையை அளந்து பேசுகிறான். பேச்சை குறைத்து பேசுகிறான். இவன் 15 மார்க் வாங்கியவன்.

நாம் வாயை மூடிக் கொண்டிருந்தால் தானே கடவுள் பேசுவதை கேட்க முடியும்.

அடுத்த சம்பள உயர்வு, பதவி உயர்வு ஆகியவற்றை முதலாளியிடம் கேட்டு பெறுகிறான் ... ... ... ... சிக்கரி

தனது செயல் திறமையினால் இரட்டிப்பு பதவி உயர்வு பெறுகிறான் ... ... ... ... ... வைல்டு ரோஸ்.

ஆனால் வாட்டர் வயலட் விஷயத்தில், இவன் வேலை செய்வதைப் பார்த்து முதலாளி அதிசயித்துப் போய் கிளார்க் வேலையிருந்தவனை Regional Manager ஆக்கி விடுகிறார்.

அக்ரிமனி தொழிலாளியின் சமாச்சாரமே வேறு. இவனை பார்த்தவுடன் (ஆன்ம தரிசனம் நிகழ்வதால்) அந்த கம்பெனி முதலாளி தான் கம்பெனிக்கு முதலாளி ஆக இருக்க இலாயக்கில்லை. (அதாவது தான் தேட வேண்டியது 'ஞானத்தை,' பணத்தை அல்ல) என்று முடிவு செய்து கம்பெனியை அவன் கையில் கொடுத்து விட்டு (ஞானம் தேட) ஓடி விடுகிறான்.

"நீ ஒரு தொழிற்சாலையில் மாத சம்பளத்திற்கு வேலை செய்ய விரும்புகிறாயா? அல்லது முதலாளி ஆக விரும்புகிறாயா?" என்று இயற்கை கேட்கிறது.

அக்ரிமனி டைப் நபர் காலேஜில் படிக்காமல் யாரிடமும் கை கட்டி வேலை செய்யாமல் சொந்தமாக தொழில் தொடங்கி காலேஜில் படித்தவர்களை தன் கீழ் வேலைக்கு வைத்துக் கொள்கிறான்.

| | | |
|---|---|---|
| ஸெண்டாரி | — | டைப்பிஸ்ட், கிளார்க், ப்யூன் |
| இம்பேஷன்ஸ் | — | எக்ஸிக்யூடிவ் |
| வைன் | — | மானேஜர் |
| வாட்டர் வயலட் | — | மானேஜிங் டைரக்டர் |
| எல்ம் | — | குரூப் கம்பெனி அதிபர் |

| | | |
|---|---|---|
| வைல்டு ஓட் | — | போட்டி இல்லாத தொழில் செய்து நிறைய பணம் சம்பாதிக்கிறான். (தனிக்காட்டு ராஜா!) |
| அக்ரிமனி | — | ஒன்றுமே செய்யாமல் மேலே சொன்ன எல்லோரையும் தன் கீழ் வேலைக்கு அமர்த்தி ஆட்டிப் படைக்கிறான். |

---

<u>செயல் (action), இன்பம் பற்றியவை:</u>

| | | |
|---|---|---|
| பீச் | — | வெளிப்புற அமைப்பு, design |
| இம்பேஷன்ஸ் | — | execution, finish- quantity, quality & time |
| பைன் | — | quality |
| வைன் | — | (தனது பணம், பலம், பதவி காண்பித்து) மிரட்டி மற்றவர்களை தனக்கு அடி பணிய வைக்கிறான். |
| வாட்டர் வயலட் | — | மற்றவர்கள் இவன் வழியில் குறுக்கிடாமல் "வழி விடுவதால்" (ஆம்புலன்ஸ்) இவன் விரைவாக வாழ்க்கையில்/தொழிலில் முன்னேறுகிறான். |
| அக்ரிமனி | — | இவன் ஒன்றுமே செய்யாமல் சும்மா உட்கார்ந்திருந்தபடியே (ஆன்ம ஞானம் பெற்றிருப்பதால்) எல்லோரையும் தன்னிடம் ஈர்த்து அடி பணிந்து கப்பம் கட்ட வைக்கிறான் |

(மாணவர்களைப் பொறுத்தவரையில்,)

| | | |
|---|---|---|
| பாடம் நடத்தும் வகுப்பு ஆசிரியர் | — | வைன் |
| கல்லூரி முதல்வர் | — | எல்ம் |
| கல்லூரி முதலாளி | — | வாட்டர் வயலட் |
| டிகிரி கொடுக்கும் அரசு | — | அக்ரிமனி |

தனது தகுதி, திறமையால் அடிமேல் அடி
வைத்து software படித்து முன்னேறுகிறான் ... லார்ச்

கம்ப்யூட்டர் கண்டுபிடித்து முன்னேறுகிறான்
(பில் கேட்ஸ்) ... ... ... ... ... ... வாட்டர் வயலட்

தானே வைரஸ் உற்பத்தி செய்து, அதற்கு
தானே anti-virus software உண்டாக்கி
பில்கேட்ஸ்-ஐ விட முன்னேறுகிறான் ... ... அக்ரிமனி (நெகடிவ்)

''நான் மியூசிக் ட்ரூப் வைத்திருக்கிறேன். உங்கள் இல்லத் திருமண ரிசப்ஷனுக்கு லைட் மியூசிக் பாட மூவாயிரம்'' என்று விளம்பரம் செய்கிறான் சிக்கரி டைப்.

தமிழ்நாட்டில் தலை சிறந்த பாடகி உன் வீட்டு கல்யாணத்தில் இரண்டு மணி நேர கச்சேரிக்கு அவள் கேட்காமலேயே நீ ஐம்பதாயிரம் பணிவுடன் சமர்ப்பிக்க வேண்டும். (நீ 'கொடுத்து' அவள் 'வாங்குவதாக' நாம் எழுதவில்லை.) இவள் விளம்பரம் செய்வதில்லை. மற்றவர்கள் இவளை தேடி வருகின்றனர். இவளுக்கு குறிப்பிட்ட தேதி சௌகர்யமா என்று தெரிந்து கொண்ட பிறகு தான் திருமண தேதியே முடிவு செய்வர். இவள் போக வர நாம் கார் அனுப்ப வேண்டும். பக்க வாத்தியக்காரர்களுக்கும் 1-2 ஆயிரம் என கொடுக்க வேண்டும். ஏனெனில் இவளிடம் சரக்கு (குரல் வளம்) இருக்கிறது.

உன்னிடம் சரக்கு (stuff) இருந்தால் நீயும் உன் இரண்டு மணி நேர வேலைக்கு ஐம்பதாயிரம் கேட்காமலேயே பெறலாம்.

உன்னிடம் உள்ள சரக்கு (stuff) நல்லதாக விளங்க/ஆவதற்கு அக்ரிமனி சாப்பிட்டு வா.

''மனிதர்களிடம் ஏண்டா கையேந்தறீங்க? அவர்களையும் நான்தான் படைத்தேன். கெஞ்சாமல், கை நீட்டாமல் என்னிடமிருந்து அள்ளிக் கொண்டு போங்கள்'' என்று இயற்கை (அக்ரிமனி என்ற இங்கிலாந்து காடுகளில் மட்டுமே) கிடைக்கக்கூடிய மலர் மூலமாக நமக்கு உணர்த்துகிறது.

[செர்ரி ப்ளம் என்ற மருந்து உபயோகமாகும் சரியான இடம் பிரசவ வார்டு, வலியில அழுது கொண்டிருக்கும் தாய் என்று பார்த்தோம். இவள் இம்மருந்து சாப்பிட, உடனடியாக சுகப்பிரசவம் ஆவதோடில்லாமல், இம்மருந்தை தொடர்ந்து சாப்பிட நம்பர் ஒன் பாடகி ஆகி இலட்சம், கோடிகளுக்கு அதிபதியாகி விடுவாள்.]

அக்ரிமனி தேவைப்படும் மிகச்சரியான (exact & accurate) நிலைமை ஒன்றை இனி பார்ப்போம். ('மிகச் சரியான' விஷயங்களைப் பற்றியே நாம் எழுதுகிறோம். We are exact and accurate. Our culture is precision.)

தனது கணவனின் விந்து தனது சினை முட்டையுடன் சேர்ந்து கருத்த ரிக்க இயலாத நிலையில் வேறு ஒருவன் விந்துவை (அவனது பெயர், விலாசம் மறைக்கப்பட்டு) ஊசி மூலம் உடலில் செலுத்தி குழந்தை பெற அவமானத்தை மனதில் சுமந்து கொண்டு சம்மதிக்கிறாள். எதற்கெனில் 'மலடி' என்ற பட்டத்தை துடைப்பதற்காக. இதுதான் அக்ரிமனி தேவைப்படும் மன நிலை. (donor; artificial insemenation)

முக்கிய எச்சரிக்கை:

மிக முக்கியமாக கவனத்தில் கொள்ள வேண்டியது என்னவெனில் அக்ரிமனி சாப்பிட்டு வரும் காலங்களில் நீ உனது எதிரிகளிடம் கூட அன்புடன், மனிதாபிமானத்துடன், பாசத்துடன் நடந்து கொள்ள வேண்டும். வன்மம் உன் மனதில் சிறிதும் வைத்துக் கொள்ளக்கூடாது. (ஏனெனில் அக்ரிமனி சாப்பிட்டு வரும் காலங்களில் எதிரியை பார்வையாலேயே, (மன்மதனை சிவபெருமான் எரித்ததுபோல்,) அழித்து விட முடியும்.

வெள்ளை மனதுடன் இருக்க முயற்சி செய். கருப்பான, கறை படிந்த எண்ணங்களை விரட்டு.

மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற.

You have committed adultery in thought. *(Holy Bible)*

அக்ரிமனி பாசிடிவ் தன்மை பெற (எல்லோரும் உன் காலடியில் பணம் கொண்டு வந்து கொட்ட) தடைக்கற்களாக உள்ள வார்த்தைகளான 'பழிக்குப்பழி' என்று பேசாதே.

மைல் கல்லில் நீ கிலோ மீட்டரை மாற்றி குறைத்து எழுதுவதால் செல்ல வேண்டிய ஊருக்கு விரைவாக சென்றடைய முடியாது.

இரமண மகரிஷி 100 சதவிகித 'பாசிடிவ்' அக்ரிமனி டைப்.

பிரச்சினையுடன், நிம்மதியில்லாதவர்களுக்கு திருவண்ணாமலை.

'அவனருளாலே அவன் தாள் வணங்கி....' என்று திருவாசகத்தில் (சிவபுராணம்) எழுதியிருப்பதைப் பார். இதை அபிராமி பட்டர் இயற்றிய அபிராமி அந்தாதியில் பின் கண்டபடி சொல்லப்பட்டுள்ளது.

எதிரிக்கு நேசக்கரம் நீட்டுகிறான் பாசிடிவ் அக்ரிமனி டைப் நபர். [சண்டையல்ல, சமாதானம் தான் சிறந்தது. (Leo Tolstoy - War and Peace)]

நியாயம் பற்றியே பேசுகிறான் - பீச் (rules, law, discipline)

நியாயத்துடன் நடந்து கொள்கிறான் - பாசிடிவ் அக்ரிமனி

அநியாயம் செய்கிறான் - நெகடிவ் அக்ரிமனி

ஒருவன் உனது ஒரு கன்னத்தில் அறைந்தால், மறு கன்னத்தை காண்பி. இதுதான் பாசிடிவ் அக்ரிமனி.

[சீன தேசத்தில் உள்ள லின்-யீ என்ற எமது மாணவர் இனி தொடர்கிறார். தமிழகத்தில் உள்ளவைகளை, இருப்பவர்களை, நடக்கும் விஷயங்களைப் பற்றி மிக உன்னிப்பாக, வேறு எந்த ஒரு தமிழனையும் விட நன்றாக தெரிந்து வைத்து அலசுபவர் இவர்.]

வீராப்பு பேசுகிறான் ... வைன்
விவாதம் செய்கிறான் ... அக்ரிமனி

வீராப்பு பேசாதே. விவாதத்தை தவிர். ஒருவன் தவறு செய்தால் அதை சுட்டிக்காட்டி அவனுடன் விவாதம் செய்யாதே.† 'துஷ்டனைக் கண்டால் தூர விலகு.' விவாதம் என வந்து விட்டால் அதை தவிர்த்து விடு.

விவாதம் என வந்து விட்டால் வார்த்தைகள் முற்றி ஏச்சு பேச்சுகளில்தான் முடியும்.

இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

Shortcut (குறுக்கு வழி) என்று அக்ரிமனியில் வருகிறது. Nature's ways are always short என்று எமர்சன் எழுதுகிறார். அவர் மேலும் எழுதுகிறார். Nature constantly works towards perfection. Nature hates our tricks. Nature's ways cannot be improved upon. நேற்று தோன்றி, நாளை இறக்கப்போகும் மனிதனால் (அவனைப் படைத்த, மற்றும் கோடானு கோடி

---

†குணத்தையோ, குற்றத்தையோ எங்கு விவாதித்தாலும், அங்கே, கூட இருக்கும் ஒவ்வொருவருக்கும் அதில் சிறிதளவாவது பங்கு வந்து சேர்ந்து விடும். — அன்னை ஸ்ரீ சாரதா தேவியார்

வருடங்களாக இருந்து வரும்) இயற்கையின் வழிகளை (அது வேலை செய்யும் விதங்களை) இன்னும் சிறப்பாக ஆக்க முடியாது.

அக்ரிமனி நம் உடலின் உட்புறத்தில் உள்ள 'மன அமைதி' பற்றியது. இம்பேஷன்ஸ் வெளிப்புற (சத்தம்) அமைதி பற்றியது என்று பார்த்தோம்.

(a) நேரத்தை மிச்சம் பிடிக்க குறுக்கு வழியை நாடுகிறான் இம்பேஷன்ஸ் டைப் நபர். "கை, கால்களை வேகமாக அசைத்து" அவசரப்பட்டு இடித்துக் கொண்டு (சில நிமிடங்களை மிச்சம் செய்வதாக நினைத்துக் கொண்டு) விபத்தில் சிக்கி மணிக்கணக்கில் டாக்டரிடமோ, நாட்கணக்கில் ஆசுபத்திரியிலோ கட்டு போடப்பட்டு கைகால்களை அசைக்காமல் கிழிந்த நாராக படுக்கையில் கிடக்கிறான்.

(b) சாமர்த்தியமாக பொய் பேசி மற்றவர்களை தன் வலையில் விழ வைத்து ஏமாற்றுகிறான் நெகடிவ் அக்ரிமனி டைப்.

அக்ரிமனியின் பாசிடிவ் தன்மை: "ஒருவன் உன் ஒரு கன்னத்தில் அறைந்தால் மற்றொரு கன்னத்தை காண்பி."

இக்கொள்கையை பின்பற்றியதால் தான் மகாத்மா காந்தி காலடியில் கோடானுகோடி இந்திய மக்கள் அடிபணிந்து கிடந்தனர்.

'புனித' விஷயங்களை பேசுகிறான் - அக்ரிமனி

Holy Bible என்று சொல்கின்றனர். "புனித பைபிள்" என்பதால் இது அக்ரிமனி பற்றியதாக ஆகி விடுகிறது. (Bible வாக்கியங்கள் telegraphic language-ல் short ஆக எழுதப்பட்டிருப்பதை கவனி.)

(கடவுளின் கடாட்சம் அதிகமாக கிடைக்க) Lend and expect nothing back (கொடுத்த பணத்தை திரும்ப கேட்க விவாதம் தானே மிஞ்சுகிறது). If you care only for those whom you love, why should you receive a gift from God.

சீன தேச கதையை மறவாதே. வயதான ஒருவருக்கு ஐந்து லட்சம் பணம், இரண்டு ஆடு ஆகியவை சொத்து. அவர் இறந்ததும் அவரது இரண்டு மகன்களும் தனக்கு சொத்தில் அதிக பாகம் வேண்டும் என்று சண்டை போட ஆரம்பித்து கோர்ட்டுக்கு போய், வாய்தா, பொய் சாட்சி ஜோடனை, மேல்கோர்ட்டில் அப்பீல் என இருபது வருடம் கேஸ் நடத்தி இறுதியில் சுப்ரீம் கோர்ட்டில் இருந்து தீர்ப்பு வந்தது. தீர்ப்பு என்னவெனில் (இருபது வருடமாக) வக்கீல் ஃபீஸ் ஐந்து லட்சம் செலவழிந்தது போக மீதி உள்ள இரண்டு ஆடுகளில் ஆளுக்கொரு ஆடு என தீர்ப்பு வந்தது.

இந்த சீன தேசக்கதையிலிருந்து நாம் தெரிந்து கொள்வது என்னவெனில், சண்டை, சச்சரவு, போட்டி, 'விட்டேனு பார்' என்பது, கோர்ட், கேஸ் என்று ஆரம்பித்தால் இரு தரப்பிற்கும் ஒன்றுமில்லாமல் போய் விடும் என்பதுதான். வக்கீல்களுக்கு வேண்டுமானுல் இது கொண்டாட்டமாக இருக்கலாம்.

ஃபைனுன்ஸ் கம்பெனியில் நீ இலட்சக்கணக்கில் பணம் போட்டு கம்பெனி இருந்த இடம் தெரியாமல் போனுல் நீ ஏமாந்த பணம் வட்டி, மன உளைச்சலுக்கு என சேர்ந்து கிடைக்க கார்ஸ். உன்னிடம் கடன் வாங்கி ஏமாற்றிய நபர் உனக்கு பணம் திரும்ப கொடுக்க, வாட்டர் வயலட். சாப்பிடு. நீ ஏதும் பேசாமல், கேட்காமல் அவனுக வட்டியும் முதலுமாக கொண்டுவந்து கொடுப்பான். அக்ரிமனி கடவுள் ஏற்படுத்திய நீதிமன்றம்.

அக்ரிமனி டைப் நபர்களைப் பார்த்து மற்றவர்கள் "He is a fighting cock, litigant" என்று கூறுவர்.

வக்கீல்கள் வாதாடுகின்றனர் ... ... ... நெகடிவ் அக்ரிமனி

பாரபட்சம் இல்லாமல் தீர்ப்பு
சொல்கிருர் நீதிபதி ... ... ... ... ... பாசிடிவ் அக்ரிமனி.

ஆம்! நீதிபதி என்பவர் 'பீச்' என்ற மருந்தின் தன்மையாளர் என்ருலும் அவர் செய்யும் வேலை அக்ரிமனி சம்பந்தப்பட்டது. (நியாயம், impartiality) (மத்தியஸ்தம் செய்பவர்கள் 55 மார்க் வாங்கிய அக்ரிமனி-டைப் நபர்கள்)

வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.

Honesty pays.

The honest work of every author exceeds his original purpose.

தனக்கு ஒரு நியாயம், மற்றவர்களுக்கு ஒரு நியாயம் என்று இருக்காதே.

எமர்சன் எவ்வளவு short & curt ஆக (நறுக்குத் தெறித்தார்போல) எழுதுகிருர் பாருங்கள்.

Don't do a thing that you would be known doing. (இது ஒன்றை மட்டுமே நீ பின்பற்றி வந்தால் கூட ஒரே வருடத்தில் மகாராஜா போல் நீ ஆகிவிடலாம்)

Every man is wanted, but no man is wanted much.

Astronomy to the selfish is astrology. Anatomy becomes palmistry

அதிகம் பேசாமல் நிறைய பணம் சம்பாதிக்க கள்ள நோட்டு தயாரித்தல், விலையுயர்ந்த மருந்து, ஸெண்ட் போலியாக தயாரித்தல், போலி முத்திரைத்தாள் அச்சிடல் போன்ற குறுக்கு வழியில் செல்பவர்களுக்கு அக்ரிமனி தேவை.

| | |
|---|---|
| நீ தொட்டதெல்லாம் பொன்னுக ... | வைல்டு ரோஸ் |
| உன் கால்பட்ட இடமெல்லாம் தங்கச் | |
| சுரங்கமாக மாற ... ... ... ... ... | வாட்டர் வயலட் |
| நீ வாய் அசைத்தாலே முத்து கொட்ட ... | அக்ரிமனி |

| | | |
|---|---|---|
| தங்கம் கடத்துகிறுன் | ... | வைல்டு ரோஸ் |
| வைரம் கடத்துகிறுன் | ... | அக்ரிமனி |

ஆனுல் இயற்கை மேற்சொன்னவர்களைப் பார்த்து சொல்கிறது. "அடப் பாவமே! ஏண்டா, நீ சிந்தித்து செயல்பட்டு கண்டு பிடிக்கும் குறுக்கு வழிகளை விட (இவை அரசால் தண்டிக்கப்படக் கூடியவை) சட்டத்தால் தண்டிக்க முடியாத குறுக்கு வழிகளை நான் வைத்துள்ளேனே. நீ திருந்து என்று நான் சொல்லவில்லை. இப்போதாவது அக்ரிமனி சாப்பிட்டு வைரம் கடத்தும் வேலை கூட செய்யாமல் சும்மா உட்கார்ந்த படியே மற்றவர்கள் (உன்னை மகான், ஸ்வாமிகள், அடிகளார் என்று சொல் லி) உன் காலடியில் கோடிகளை கொண்டு வந்து கொட்டுவதை அனுபவித்துக்கொள்."

---

முருகக் கடவுளிடம் சென்று அருணகிரி நாதர் கேட்டார்: "உலகிலேயே மிக நல்ல விஷயமாக நான் எதை செய்ய வேண்டும்?"

கடவுள் பதில் சொன்னுர்: "சும்மா (பேசாமல்) வாயை மூடி கொண்டு இரு."

(a) உண்ணுவிரதம் இருக்கிறுன் - ராக் வாட்டர் பாசிடிவ் டைப்

(b) மௌன விரதம் இருக்கிறுன் - அக்ரிமனி பாசிடிவ் டைப்.

பின்னதே சிலாக்கியமானது.

Golden words are not repeated என்பர். தமிழில் 'நல்ல மாட்டுக்கு ஒரு சூடு.'

நெகடிவ் அக்ரிமனி டைப் நபர் மனதிற்குள் எப்படி (shortcut) குறுக்கு வழியில் செல்கிறுன், செல்லப் பார்க்கிறுன் எனில் (i)சாமர்த்தியமாக பேசி எதிராளியை ஏமாற்றி (ii) கவர்ச்சிகரமாக விளம்பரம் செய்து

ஆனுல் இயற்கை சொல்கிறது. "என்னை விட நல்ல குறுக்கு வழி உன்னுல் உண்டாக்க முடியாது."

Neat ஆக, டிரெஸ் செய்து கொள்கிருன் ... ... ... பீச்
'கவர்ச்சி' யாக (மற்றவர்கள் தன்னை அங்கீகரிக்க அல்லது தனது வலையில் விழ) டிரெஸ் செய்து கொள்கிருன். அல்லது 'குறுக்கு வழியில்' பணம் சம்பாதிக்க கடத்தல், ரூபாய் நோட்டு அச்சடித்தலில் ஈடுபடுகிருன். ... ... ... ... ... அக்ரிமனி
'வயிற்றுப்பசிக்காக' திருடுகிருன் ... ... ... ... சிக்கரி
தனக்கேற்ற கல்வி கற்றுக் கொடுக்கும் ஆசிரியர் கிடைக்காததால் (ஒரு கலை, subject கற்று கோடிக் கணக்கில் சம்பாதிக்க முடியாததால்) திருடுவதையே 'தொழிலாக' (இருபத்தி ஐந்து முறை சிறை சென்றவன்) கொள்கிருன். ... ... ... ... ... ... செஸ்ட்நட்பட்

தன் வீட்டிற்கு மேல் பறந்து கொண்டிருக்கும் ஆகாய விமானம் வெடித்து அதில் ஒரு பயணியின் பெட்டி (பல கோடி ரூபாய்களுடன்) தன் வீட்டு மொட்டை மாடியில் விழுவதாக கனவு காண்கிருன் - க்ளெமடிஸ் மற்றும் வைல்டு ரோஸ்.

நீ ஒரு அக்ரிமனி நெகடிவ் டைப் நபராக இருந்தால் அக்ரிமனி சாப்பிட்டு வர, விரைவில் கோடிக்கணக்கில் பணம் வரும்.

ஆனுல் நீ அக்ரிமனி டைப் ஆக இல்லாத பட்சத்திலும் கூட பல கோடி பெறுமானம் உள்ள சொத்திற்கு அதிபதியாக இயற்கை (அக்ரிமனி என்ற இங்கிலாந்து காடுகளில் காணப்படக்கூடிய மலர் மூலமாக) சொல்கிறது:

(a) "மாதத்தில் அல்லது வருடத்தில் ஒரு நாளாவது மௌன விரதம் இரு. (உன் வூட்டில் இருக்காதே. திருவண்ணமலைக்கு ஓடி விடு. அங்கு எவரிடமும் பேசாதே.")

(b) மனசாட்சி படி நடந்து கொள்.

(c) கோயிலுக்குள் இருக்கும் போதாவது பக்கத்தில் உள்ளவர் (உறவினர், நண்பர் என்ருலும் கூட) மீது படாமலும், பேசாமலும் இருந்து கடவுள் தரிசனம் செய்து விட்டு வா. [இதுதான் 'ஆலயம் செல்வது சாலவும் நன்று' என்பதன் அர்த்தம். சில நிமிடங்கள் அல்லது மணி நேரமாவது பேசாமல் இருக்கத்தான் (தினம் சிறிது நேரமாவது பாசிடிவ் அக்ரிமனி டைப் நபர் செய்யும் வேலையை இமிடேட் செய்ய) கோயிலுக்கு செல்வது. கடவுள் தரிசனம் இதற்கடுத்தபடிதான்.]

(d) பெரியவர், மகான்களை தரிசனம் செய்ய (சந்திக்க அல்ல, அவர்களுடன் பேச அல்ல) செல்லும் போது மனதில் கவலை, கஷ்டங்கள் இருக்கும் போது செல்லாமல் மனம் நிர்மலமாக இருக்கும்போது மட்டுமே செல்ல வேண்டும்.

பேச்சு, விவாதம் இல்லாமல் அமைதியாக அல்லது வார்த்தைகளை அளந்து குறைவாக பேசுதல் என்பதை மனதில் வைத்துக் கொண்டால் அக்ரிமனி உபயோகமாகும் சந்தர்ப்பங்களை நாம் தெரிந்து கொள்ள முடியும்.

'பேச்சு' எங்கெல்லாம் வருகிறதோ அங்கெல்லாம் அக்ரிமனி. [ஆனால் உன்னிடம் எவராவது பேச வரும் முன்பு அல்லது நீ எவருடனாவது பேச செல்லும் முன்பு — ஹீதர்.]

---

உன் வாழ்க்கையில் நீ சரியான பாதையில் செல்ல

| | | |
|---|---|---|
| ஸ்க்ளெரான்த்தஸ் | — | நமது செயல் (action) |
| ஆஸ்பென் (கடவுள் தொடர்பு) | — | கடவுள் நம்மை ஆட்டிப் படைத்து நம் மூலமாக உலகில் வேலை செய்கிறார். |
| ஓக் | — | சரியான தடத்தில் (tract) செல்ல. |
| ஹால்லி | — | மனித நேயம் |
| அக்ரிமனி | — | மற்றவர்க்கு துன்பம் செய்யாமல் இருத்தல் |

மேற்கண்ட ஐந்து மருந்துகளையும் சேர்த்து ஒரு வாரம் தினம் ஒரு வேளை சாப்பிட்டு பார். வாழ்க்கை ருசிக்க ஆரம்பிக்கும்.

---

"Work more, talk less" (பேச்சைக் குறைத்து வேலைகளை அதிகம் செய்) என்பதைப் படித்து விட்டு பலர், தான் அவ்வாறு செய்தும் பலன் தெரியவில்லையே என்று அங்கலாய்க்கிறார்கள். பாவம் இவர்களுக்கு சரியான அர்த்தம் தெரியவில்லையே!

---

†ஒரே வருடத்தில் சில கோடி ரூபாய் சம்பாதிக்க இரவு பகலாக கண் விழித்து வேலை செய்து பாடுபடுகிறான். வெர்வைன் டைப். குறுக்கு வழியை (கள்ள நோட்டு அச்சடித்தல்) நாடுகிறான் அக்ரிமனி டைப் நபர். முடிவில், பாவம் வாழ்க்கையில் ரூபாய் நோட்டு எண்ணுவதை விட்டு விட்டு ஜெயில் கம்பிகளைத் தான் எண்ணிக் கொண்டிருப்பான்.

Work more என்றால் தினம் பன்னிரண்டு மணி நேரம் வேலை செய் என்று அர்த்தம் இல்லை. Work more honestly என்று அதை படிக்க வேண்டும்.

---

A comparison among a few remedies along with *Agrimony* in respect of unhappiness.

| | | |
|---|---|---|
| Honeysuckle | — | regrets |
| Gentian | — | disappointment |
| Agrimony | — | sadness, grieves on unexpected losses which he cannot retrieve. |
| Water Voilet | — | sadness over unexpected, unwanted (which he has to face, tackle and solve at any cost.) |

Honeysuckle regrets over missed opportunities/lost chances. One cannot go into the past. But (if one regress over past losses) by taking Honeysuckle we realise the lesson given by mighty Nature in that loss, employ that lesson in future and earn double the amount of losses of the past. Thus we retrieve the losses of the past.

<u>அக்ரிமனி, ஜென்ஷன், ஹனிஸக்கிள், வாட்டர் வயலட்</u>

(1) நாம் விரும்பிய "நல்ல" விஷயம் எதிர்பார்த்து ஆனால் கிடைக்காமல் போனால் "ஏமாற்றம்" அடைகிறான். (disappointment) (துக்கம் அல்ல) ... ஜென்ஷன்

(2) கடந்த காலத்தில் நடந்துவிட்ட தவறுகள், தவறவிட்ட வாய்ப்புகள், ஆகியவற்றை நினைத்து 'அப்படி நடக்காமல் இருந்திருந்தால்' என வருந்துகிறான் ... ... ... ... ... ... ... ஹனிஸக்கிள்

(3) "சற்றும் எதிர்பாராத, தேவையில்லாத விஷயம் நடந்து, ஆனால் எப்படியும் அதை எதிர் கொண்டு போராடி ஜெயித்துத்தான் ஆக வேண்டும் என்ற "இக்கட்டான" நிலைமைக்கு ... ... ... ... வாட்டர் வயலட்.

(4) எதிர்பாராத "தேவையில்லா" விஷயம் நடந்து விட்டால் "துக்கப்படுகிறான்." போராடி ஜெயிக்க எதிர்கொள்ள முடியாது என்பதால் அந்த

துக்கத்தை மனதிற்குள் போட்டு புதைத்து
விடுகிருன். ... ... ... ... ... ... ... ... ... அக்ரிமனி

---

(A) ஓரிரு டோஸ் கார்ஸ் சாப்பிட்ட பின்பு T.T.E. யின் அருகில் சென்று நாம் கேட்டவுடன் பெர்த் கொடுக்கிருர். ஆனுல்

(B) அக்ரிமனி சாப்பிட, நாம் கேட்காமலேயே அவரே நம்மிடம் ஓடி வந்து பவ்யமாக பெர்த் கொடுக்கிருர்

(C) கடவுளிடம் ஓடிச் சென்று (surrender) சரணுகதி அடைகிருன் — ஸ்வீட் செஸ்ட்நட்.

(D) எல்லா மனிதர்களையும் அவர்கள் சொத்து உட்பட தன்னிடம் ஓடி வந்து சரணடையச் செய்கிருன் - அக்ரிமனி. (ஏனெனில் இவனே கடவுளாக ஆகி விடுகிருன்)

Man is God in ruins (கடவுளின் இழிந்த/இடிந்து போன தன்மையாளர்தான் மனிதன்) என்று எமர்சன் எழுதுகிருர். நமது எல்லா நெகடிவ் தன்மைகளையும் ஒட்டு மொத்தமாக அக்ரிமனி நீக்கி விடுவதால் கடவுளாகி விட முடிகிறது.

(விதிக்கு) அடி பணிந்து மற்றவர்கள் தனக்கு
கொடுக்கும் கஷ்டங்களை, வேறு வழியில்லாமல்,
பொறுத்துக் கொள்கிருன் ... ... ... ... நெகடிவ் அக்ரிமனி

தான் செய்த பாவம் என்று விதிமேல் பழி போடுகிருன் ... பைன்

பாசிடிவ் அக்ரிமனி: சூரிய சந்திரர்களை சேர்க்க வைத்து அமாவாசையை கிருஷ்ணர் உண்டாக்கியது போல். உயிருள்ள ஜீவனுலும், உயிரற்ற பொருளாலும் தான் சாகக்கூடாது, வீட்டிற்கு உள்ளேயும், வெளியேயும் சாகக்கூடாது என்று வரம் வாங்கிய ஹிரண்யகசிபுவை வாசற்படியில் வைத்து நகத்தால் (நகம் வளர்கிறது - உயிருள்ளது, ஆனால் வெட்டினுல் வலி, இரத்தம் வரவில்லை. ஆகையால் உயிரில்லாதது. நீ இப்படி பேசினுல் அப்படி சொல்லி மடக்கலாம். அப்படி பேசினுல் இப்படி சொல்லி மடக்கலாம்.) கிழித்து கொன்றது போல்

For strategy — Cerato

For dimensional strategy — Water Violet

For dimensional strategy
with unfailing 100% success — அக்ரிமனி

'இரத்தினச் சுருக்கமாக' என்று சொல்கிறோம். ஆம்! அக்ரிமனி சாப்பிட்டு வர ஐந்து மணி நேரம் பேசி நீ என்ன சொல்ல அல்லது அடைய விரும்புகிறாயோ அதை பத்து நிமிடத்தில் சாதித்து விடுகிறாய்.

| | |
|---|---|
| நிறைய பணம் ரூபாய் நோட்டுகளாக சம்பாதிக்கிறான் | சிக்கரி, ஹார்ன்பீம், வைல்டுரோஸ், ராக் ரோஸ், ஆகிய நபர்கள் |
| ஒரு கிராம் எடை எழுபதாயிரம் ரூபாய் மதிப்புள்ள இரத்தினங்களாக சம்பாதிக்கிறான் | அக்ரிமனி |

அக்ரிமனி சாப்பிட்டு வர டெலஸ்கோப் ரேட்டில் பணம் வருவதன் இரகசியம் இதுதான். நம்மால் எவருக்கும் பிரச்சினை இருக்காது. எவரும் நமக்கு பிரச்சினை உண்டாக்க முடியாது. ஆகையால் (நாம் வேகமாக நிறைய வேலைகளை செய்வதற்கு பதிலாக) வேலைகள் விரைவாக நடக்கின்றன. இதற்கேற்ப வருமானமும் அதிகரிக்கிறது.

உன்னிடம் பாசிடிவ் அக்ரிமனி தன்மை இல்லாமல் நீ செயல்படும் போது அது மற்றவர் மீது (தெரிந்தோ தெரியாமலோ) சேற்றை வாரி இறைப்பது போல் உள்ளதால் (ஆபீஸ் வேலை அல்லது சொந்தத் தொழிலில்) மாதம் ஐம்பதாயிரம் சம்பாத்தியத்தில் முக்கால்வாசி பணத்தை நோய் வந்து வைத்திய செலவு, கடன் கொடுத்து ஏமாறுதல், குழந்தைகளை வளர்க்கத் தெரியாமல் ட்யூஷன் செலவு என முக்கால்வாசி வருமானம் விரயம் ஆகிறது. இந்த விரயத்தை தடுப்பது, இன்னும் அதிகமாக சம்பாதிப்பதை விட எவ்வளவோ மேல்.

---

'குரு'வாக உள்ள நெகடிவ் வைன் டைப் நபர் (சாமியார், ஸ்வாமிகள், அடிகளார்) தன்னிடம் வரும் நபர்களை (அவர்கள் வாழ்நாள் முழுவதும் முன்னேற விடாமல்) சிஷ்யனாகவே வைத்திருக்கிறார்.

> அக்ரிமனி டைப் குரு என்பவர் தன்னிடம் வருபவர்களை (அவர்களுக்கு உபதேசம் கொடுத்து) தனது ஸ்தானத்திற்கு இணையாக உயர்த்தி விடுகிறார்.

மேற்கு வங்காளத்தில் உள்ள பேலூர் மடத்தில் சேர்ந்த உடனேயே மற்ற எல்லோரையும் விட பெரியாக குருவாக நீ நியமிக்கப்பட்டு விடுவாய்.

"எங்கேடா இருக்கிறான் உன்னையும் அவன் ஸ்தானத்திற்கு உயர்த்தி விடும் (உண்மையான) குரு?" என்று இயற்கை கேட்கிறது. அது மேலும்

கேட்கத்தான் செய்கிறது. "ஏண்டா (போலி) சாமியார்கள் முன்னால் வாய் பொத்தி, அடி பணிந்து நிற்கிறீங்க? நீ வாழ்நாள் பூராவும் அவனிடம் சென்றால் கூட அவன் உன்னை உயர்த்தி விட மாட்டான். தனது பதவி காலியாகி விடுமோ என்ற பயந்தாங்கொள்ளி அவன். இனியாவது மௌன விரதம் முடிந்தவரை இருந்து (இதற்கு சில நாட்கள் முன்பிருந்தே அக்ரிமனி என்ற மலர் மருந்து சாப்பிட்டு வந்து) பார். உன் முன்னால் எல்லோரும் வாய் பொத்தி, அடி பணிந்து நிற்பர்."

---

கோயிலில் உள்ள விக்கிரஹம் முன்பாக எல்லோரும் அநேகமாக தினம் தினம் சென்று அடிபணிந்து நிற்கின்றனர். இரகசியம் என்னவென்றால் அது ஒரு வினாடி கூட பேசியது இல்லை. பேசவும் பேசாது.

கோயிலுக்கு செல்வது எதற்கு எனில் அந்த விக்கிரஹம் போல் பேசாமல் இரு. அல்லது பேச்சைக் குறை.

மற்றவர் செய்த குற்றம் குறைகளை சுட்டிக் காண்பித்து பேசாதே. (அன்புடன் கண்டிக்கலாம்) இப்படி நடந்து கொண்டால் எல்லோரும் உனக்கு (தட்டில் ஆப்பிள், நோட்டுக்கட்டுடன் உன் காலடியில் வைத்து) அடி பணிவர்.

கோயில் விக்கிரஹத்தில் உள்ள கடவுள் ஏன் பேசவில்லை எனில் அவரவர் தகுதிக்கேற்ப பேச வேண்டும் (partiality). தவிர பாரபட்சத்துடன் நடந்து கொள்ள வேண்டியிருக்கும். ஆக, கோயிலில் உள்ள சுவாமி சிலை பேச ஆரம்பித்து விட்டால் எல்லோர் சாயமும் வெளுத்து விடுமாதலால் அன்றிலிருந்து எவனும் கோயிலுக்கு செல்ல மாட்டான்.

அக்ரிமனி பேசுகிறது: "எல்லா மனிதர்களிடம் ஒரே மாதிரியாக (நல்லவன், கெட்டவன் என பாரபட்சம் பார்க்காமல்) நடந்து கொண்டால் நீ ஒரு வேலையும் செய்யாமலேயே உன் காலடியில் கோடிக்கணக்கில் பணம் (மற்றவர்களால் கொண்டு வந்து) கொட்டப்படும்.

சில சந்தர்ப்பங்களில், "கண் இருந்தும் குருடனாக இருக்கிறாயே" என்று சிலர் செய்யும் விஷயங்களை சுட்டிக் காட்டி நாம் பேசுகிறோம். இதற்கு சரியான அர்த்தம் என்னவெனில், இது புறக்கண் (உடலின் வெளிப்புறத்தில் உள்ளது) பற்றியது அல்ல. 'அகக்கண்' ஞானக்கண் பற்றியது. மனக்கண்ணோட்டம் என்று சொல்லப்படுகிறது.

குறுகிய கண்ணோட்டம் என்று சொல்கிறோம். அதாவது இவன் உள் மனதை (மன சாட்சியை) சில விஷயங்களை (தவறான அபிப்பிராயத்தில்)

மூடி வைத்து விடுவதால் தெரிந்தே பல தவறுகளை செய்யும்படி ஆகி நிறைய செல்வத்தையும் இழந்து விடுகிருன்.

| | |
|---|---|
| Consultant | — Cerato |
| Advisor | — Water Violet |
| Friend, Guide, Philosopher | — Agrimony |

("அவரை எனது குருவாக ஏற்றுக் கொண்டு விட்டேன்" என்று சொல்கிருன்)

நல்ல குரு கிடைக்க ... ... ... செஸ்ட்நட்பட்

குருசொல்வதை மனதில் வாங்கிக் கொள்ள, கிரகித்துக் கொள்ள ... அக்ரிமனி

தப்பிக்க பொய் சொல்கிருன் ... ... செஸ்ட்நட்பட்

தனது பக்கம் (நியாயம் இல்லா விட்டாலும் கூட) ஜெயிக்க வாதிடுகிருன் ... ... ... ... ... அக்ரிமனி

---

நீதிமன்றத்தில் கேஸ் நடத்தும் இரு தரப்பு வக்கீல்களையும் 'நெகடிவ்' அக்ரிமனி டைப் என்றும் (இரு தரப்பு வாதங்களையும் கேட்டு) தீர்ப்பு சொல்லும் (நியாயமான) நீதிபதியை பாசிடிவ் அக்ரிமனி என்றும் முன்னல் குறிப்பிட்டோம்.

'கண்ணேட்டம்' என்ற வார்த்தை அக்ரிமனி பற்றி தெரிந்து, புரிந்து கொள்ள உதவும்.

[கண்ணேட்டம்: அணுகும் அல்லது பார்க்கும் முறை perspective; point of view; viewpoint]

தனது கட்சிக்காரன் ஜெயிப்பது பற்றி மட்டுமே பார்க்கிருன் வக்கீல் (நெகடிவ்) ... ... அக்ரிமனி

இரண்டு தரப்பு வாதங்களையும் சீர் தூக்கி பார்த்து, அலசி நியாயம் (தீர்ப்பு) வழங்குகிருன் ... ... பாசிடிவ் அக்ரிமனி டைப் (நீதிபதி)

---

(a) சாதாரண மனிதர்களால் புரிந்து கொள்ள
முடியாத கண்டுபிடிப்பு செய்வதால்
தனியாக இருக்கிருன் ... ... ... ... ... வாட்டர் வயலட்.

(b) மற்றவர் அருகில் இருந்தால் தான்
செய்யும் வேலையின் வேகம் குறைந்து
விடும் என்பதால் தனியாக இருக்கிருன் .. இம்பேஷன்ஸ்

(c) மற்றவர்களுடன் பேசப் பிடிக்காததால்
மற்றவர்களை தவிர்க்கிருன். (ஞானம்
பெற புறக்கண்ணை மூடி அகக்கண்ணுல்
பார்த்தால்தான் முடியும்) ... ... ... ... ... அக்ரிமனி

மூவருமே தனியர்கள் தான் எங்கோ, எப்போதாவதுதான் ஒரு inventor வருகிருன். ஒரு Chief Executive உள்ளான். ஒரு ஞானி தோன்றுகிருன்.

மூன்றாவதாக உள்ள (third eye) ஞானக்கண் திறக்க, அக்ரிமனி.

வெளிப்புற அழகு - இம்பேஷன்ஸ்

செவிடர்களுக்கு (செய்கையால்) தொலைக்காட்சியில் செய்தி வாசிப்பவர் 20 சதவிகித அக்ரிமனி டைப் நபர்.

வக்கீல் மற்றும் (பிறவிச்) செவிடர், குருடர்களுக்கு 'டானிக்' போல் வேலை செய்வது அகரிமனி. வக்கீல்களை ஏன் செவிடர், குருடருடன் ஒப்பிட்டுச் சொல்கிறேம் எனில், தனது கட்சிக்காரன் கொலை அல்லது ஏதோ குற்றம் செய்தான் என்று தெரிந்தும் மனச்சாட்சியை கொன்று புதைத்து (அகத்தில் உள்ள உண்மையை) மறைத்து வாதிடுகிருன். ஆகையால் குருடன்.

வக்கீல் 'செவிடன்' ஆகிருன் எனில் எதிர்தரப்பு வக்கீல் பேசுவதில் உண்மை, நியாயம் என்ன இருந்தாலும் அவற்றை காதில் போட்டுக் கொள்ளாமல் தன் கட்சி பற்றியே பேசுகிருன்.

"சண்டை, சச்சரவு" (quarrel, dispute) அக்ரிமனியில் வருகிறது.

இந்து, முஸ்லீம், கிறிஸ்தவர்களிடையே அங்கொன்றும் இங்கொன்றுமாக சண்டை சச்சரவுகள் நிகழத்தான் செய்கின்றன. ஆனுல் சமண மதத்தவர் மற்ற எந்த மதத்தினருடனுவது சண்டை போட்டுள்ளனரா என்ருல் 'இல்லை' என்றுதான் சொல்ல வேண்டும்.

ஏனெனில் ஜெயின் மதத்தினர் பாசிடிவ் அக்ரிமனி தன்மையாளர்கள். அதாவது சண்டையை உண்டாக்க மாட்டார்கள். எப்படியெனில் ஒரு

ஜெயின் துறவியிடம் சென்று ஒரு நபர் பற்றி அல்லது ஒரு belief அல்லது பற்றி கேட்டு அது சரியா, தப்பா என்று நாம் கேட்டால் 'சரி' அல்லது 'தப்பு' என்று பதில் சொல்ல மாட்டார். ''சரியாகவும் இருக்கலாம். தப்பாகவும் இருக்கலாம்'' என்றுதான் சொல்வர். ஏதாவது ஒன்றுதான் சரி என்று வாதிட மாட்டார்.

கீழ்க்கண்ட கேள்விக்கு பதில் சரியாக சொல்பவருக்கு ஆயிரத்து இருநூறு ரூபாய் பரிசு உண்டு. (உனக்கு பதில் தெரியாவிட்டால் எனக்கு குருதட்சணையாக ஆயிரம் ரூபாய் கொடுத்து பதில் தெரிந்து கொள்வதால் உனது வருமானம் டெலஸ்கோப் ரேட்டில் உயர்ந்து கொண்டே போகும்.)

கேள்வி : Rejuvenation (இளமை திரும்ப) என்ன மருந்து? அதாவது நீ 50 வயதான அரைக்கிழம் ஆனாலும் சரி, குச்சி ஊன்றி நடக்கும் 70-80 வயது கிழவன் ஆனாலும் கூட எல்லோரும் உன்னிடம் பரிவு, அன்பு காட்டி நடக்க (நீ அவர்களை திட்டினாலும் கூட உன்னிடம் வெறுப்பு வராமல் இருக்க) நீ மறுபடியும் குழந்தையாக (இளமை திரும்ப) [எல்லோரும் குழந்தையிடம், அன்பு, பரிவு காட்டி ஜாக்கிரதை, கவலை, எச்சரிக்கை பொறுப்புடன் நடந்து கொள்கின்றனர். ஆனால் குழந்தை எவரையும் லட்சியம் செய்வதில்லை—எமர்சன்.] ஏனெனில் குழந்தையிடத்தில் கள்ளம், கபடு இல்லை. ஆகையால் தான் குழந்தையும் தெய்வமும் ஒன்று என்று சொல்கிறோம்.

பதில் : அக்ரிமனி

எமர்சன் எவ்வளவு சரியாக சொல்கிறார் பாருங்கள்; Everybody cares for the child, but the child does not care for anyone.

கவி இரவீந்திர நாத் தாகூர் எழுதுகிறார். Every child born on earth is a proof that God is not yet displeased with man.

<u>அக்ரிமனியின் மேல்நிலை உபயோகங்கள் :</u>

Sophisticated என்ற ஆங்கில வார்த்தை உள்ளது. செயற்கையாக ஆக்கு என்பது இதன் அர்த்தம். எல்லா வசதிகளையும் தன்னுள்ளே அடக்கியது என்று பொருள்.

உதாரணமாக தொலைக்காட்சி பெட்டியில் ரிமோட்-ல் ஆடோமேடிக் ஆக செலக்ட் செய்வது. இதே போல் கம்ப்யூட்டரில் நமது வேலையை சுலபமாக்க பல உத்திகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஒரு கடிதத்தை ஆயிரம் பேருக்கு ஒரே நிமிடத்தில் அனுப்பி விடலாம். நமக்கு

அறிமுகமானவன்தான் கடிதம் அனுப்பி உள்ளானு அல்லது அறிமுகமில்லாத புதிய நபரா என்பது போன்று.

இப்போது sophisticated உபயோகம் அக்ரிமனியில் என்னவெல்லாம் செய்யலாம் என பார்ப்போம்.

| | | |
|---|---|---|
| அழகு | — | பீச் (வெளிப்புற அழகு) — பருவப்பெண் |
| லக்ஷணம் | — | ஸெராட்டோ — (அவள் படித்த படிப்பு) |
| அதிரூப சுந்தரி | — | வாட்டர் வயலட் — (அவள் பேசும், நடந்து செல்லும் விதம்); பட்டுப்புடவை, மணப்பெண் |
| சௌந்தர்யம் | — | அக்ரிமனி — (ஞானம் உள்ள தேவி, அம்பாள் ஸ்வரூபம்) என்கிறோம். இவளைப் பார்த்தால் கையெடுத்துக் கும்பிட வேண்டும் போல் உள்ளது (மடிசார் கட்டிய மாமி) |

'Perfect' என்ற வார்த்தை அக்ரிமனி என்ற மலர் மருந்தின் பாசிடிவ் தன்மைகளைப் பற்றி அறிந்து கொள்ள உதவும். முன்னாள் கல்வி அமைச்சர் சி. சுப்ரமணியம், நடன மேதை பத்மா சுப்ரமணியம் நாட்டியத்தை பாராட்டி ஒரு மேடையில் அவளது நிகழ்ச்சியின் போது பேசுகையில் 'She has achieved perfection in dance' என பேசினார். இது அபத்தம். எப்படியெனில் Perfection is a thing to be aimed at and not achieved Perfect என்றால் 'முழுமையான, குறை, தவறு இல்லாத,' என்று அர்த்தம்.

"அது இருந்தால் இது இல்லை. இது இருந்தால் அது இல்லை. அதுவும் இதுவும் சேர்ந்து இருந்தால் அவனுக்கு இங்கே (இவ்வுலகில்) வேலையில்லை." அவன் கடவுளாக ஆகி விட்டிருப்பான்.

நமக்கும் கடவுளுக்கும் உள்ள ஒரே வித்தியாசம் என்னவென்று எமர்சன் எழுதுகிறார்.

Man is God in ruins. (கடவுளின் இடிந்து போன நிலை தான் மனிதன்)

Man is imperfect

God is perfect

எல்லா மனிதர்களுமே கடவுள் போல் perfect ஆவதற்கு முயற்சி செய்து கொண்டேதான் இருக்கின்றனர்.† இதனால்தான் perfect ஆக உள்ள

† உன் குழந்தை நோபல் பரிசு வாங்கும் விதத்தில் அவனை வளர்க்க, சரியான கல்லூரியில் சரியான படிப்பு படிக்க வைக்க நீ வாட்டர் வயலட் சாப்பிட்டு வா.

கடவுளை எந்நேரமும் தொழுது கொண்டிருக்கிறான். perfection வந்தால் தான் திருப்தி, சாந்தி, மன அமைதி வரும்.

கடவுள் perfect ஆக இருப்பதால் அவரிடம் நல்லவை எல்லாமே இருக்கிறது. தேவையில்லாத வியாதி, கவலை, கஷ்டம் கிடையாது.

'கவர்ச்சி' என்ற வார்த்தையை அக்ரிமனியின் 'நெகடிவ்' தன்மையை குறிப்பதாக முன்னொரு பக்கத்தில் சொன்னோம். முன்னணி சினிமா நடிகை முகத்தில் 'கவர்ச்சி' இருக்கிறது. சரியாக சொல்ல வேண்டுமானால் நம் மனதில் காம உணர்ச்சியை தூண்டுவதாக இருக்கிறது.

பெண் தெய்வங்களின் பழைய கால படங்களை பாருங்கள். அதில் அமைதிதான் இருக்கும் (அப்படத்தை பார்த்தவுடன் நமக்கு பக்தி வரும்)

எதிர்பார்த்தது கிடைக்காமல் போவது
ஏமாற்றம் ... ... ... ... ... ... ஜென்ஷன் (நெகடிவ்)

எதிர்பாராதது (ஆனால் நடக்கக் கூடாதது)
நடந்து விடுவது. இதனால் வருத்தம்,
துயரம், துன்பம் ... ... ... ... ... அக்ரிமனி (நெகடிவ்)

Distress என்பதற்கு the lack of money or comforts என்று பொருள்.

கடுந்துயரம் (angush) என்பது இரு மருந்துகளில் வருகிறது. (severe mental or physical pain or suffering) extreme suffering — a severe struggle

Anguish (வேதனை) of mind — Sweet Chestnut

Auguish of body (torture) — Rock Rose

| | | |
|---|---|---|
| middle class family பணத்தேவைக்கு (struggle, திண்டாட்டம் அல்ல) | ... ... | சிக்கரி ஹார்ன்பீம், வைல்டு ரோஸ், ராக்ரோஸ் |
| Low income group பணக் கஷ்டத்திற்கு | ... | அக்ரிமனி மற்றும் வாட்டர் வயலட் |

Sad, வருத்தம் = அக்ரிமனி

dissatisfaction (அதிருப்தி) = ஜென்ஷன்

ஏமாற்றம் = ஜென்ஷன்

எதிர்பார்த்தது கிடைக்காமல் போவது = ஏமாற்றம் .. .. நெகடிவ் ஜென்ஷன்

Sadness, distress: நெகடிவ் அக்ரிமனி

disgust (of appearance of body) — Crab Apple

disgust (with others) - Willow

disgrace - Agrimony

grace - divine, ஈஸ்வர கடாக்ஷம், கிருபை, elegance, charm — (பாசிடிவ் அக்ரிமனி தன்மை)

ஒருவன் புத்தகம் எழுதுகிருன். அதை edit செய்ய எடிட்டர் ஒருவரிடம் கொடுத்து (ஒட்ட வேண்டியதை ஒட்டி, வெட்ட வேண்டியதை வெட்டி, அதே சமயம் சப்ஜெக்டை மாற்ருமல்) வளவளாக்களை (தேவையில்லாதவைகளை) வெட்டி விடுகிருன். எடிட்டர் என்பவன் ஐம்பது சதவிகித அக்ரிமனி டைப்.

சில முடி திருத்தும் நிலையங்கள் மற்றும் ஹோட்டல்களில் வாடிக்கையாளர்களுக்கு எச்சரிக்கை செய்வது (அல்லது வேண்டுகோள் விடுப்பது) போல் ''அரசியல் பேசாதே'' என்ற போர்டு தொங்கும். அரசியல் பேசினுல் விவாதம் முற்றி சண்டை சச்சரவு தான் மிஞ்சும். இதனுல் வியாபாரம் மந்தமாகி விடும்.

நூலகங்களில் 'silence please' (அமைதி காக்கவும்) என்று சுவரில் எழுதப்பட்டிருக்கும். புத்தகங்களை படித்து அறிவு அதிகமாக ஆக உள் மன அமைதி கெடும். ஜாக்கிரதை, படிக்கக் கூடாதவைகளை அதிகம் படிக்காதே என்று மறைமுகமாக சொல்கின்றனரோ?

---

## அக்ரிமனி (Agrimony)

டெலஸ்கோப் — டெலஸ்கோபிக் ரேட் (telescopic rate) - 'tele' என்று ஆரம்பிக்கும் எல்லா வார்த்தைகளும்: Telegram, Telephone, Teleprinter (இன்று internet) - telescope - Mind clean - மூளையை சுத்தம் செய்ய வால்நட் (brain tiredness அல்லது boredom) - மனசை சுத்தம் செய்ய அக்ரிமனி - திருவண்ணுமலை - நீ கடவுளாகவே ஆகி விடுதல் - வாட்டர் வயலட் என்பது ஸ்வீட் செஸ்ட்நட்-க்கு அண்ணன் - Grievance Redressal Officer - Counselling - சண்டை, சச்சரவு - மன அமைதி - சாந்தி -

நிர்மலமான மனம் - வக்கீல், குருடர், செவிடருக்கு அக்ரிமனி - மற்றவர் வாயை அடைக்க - sophisticated - கவர்ச்சி - சரக்கு (stuff) உள்ளவன் - remote control - wireless - Rejuvenation - elixir of life - invigorator - அக்ரிமனி என்பது 100% சர்வ ரோக நிவாரணி - [வாட்டர் வயலட் என்பது 75% சர்வ ரோக நிவாரணி - 50% சர்வ ரோக நிவாரணி என்பது ஸெராட்டோ - 25% என்பது பீச்] நீ எவரையும் care செய்யாமல், அதே சமயத்தில் உன்னை எல்லோரும் care செய்ய - ஞானம். Cheap and best. ஜெயின் (சமண) மதத்தினர். (Live and Let Live)

Beech, Cerato - low key approach
Water Violet, அக்ரிமனி - upper key approach
ஞான திருஷ்டி - அக்ரிமனி
தூரதிருஷ்டி - க்ளெமடிஸ்

---

இயந்திரத்திற்கும் மனிதர்களுக்கும் இடையே உள்ள ஒரு பெரிய வித்தியாசம் அதற்கு 'மனம்' இல்லை.

மெஷினில் மாதம் ஒரு முறை அழுக்கு முதலியவற்றை எடுத்து விட்டு (கிராப் ஆப்பிள்) எண்ணை (lubrication) போடுகிறோம் (ஹார்ன்பீம்)

உடலை சுத்தம் செய்ய முதல் தினம் 3 வேளை கிராப் ஆப்பிள் சாப்பிட்டு, பிறகு tone up செய்ய (டானிக் சாப்பிடுவது போல்) மறு தினம் மூன்று வேளை ஹார்ன்பீம் சாப்பிடு.

அடுத்தபடியாக, இதை விட முக்கியமாக மூளையை சுத்தம் செய்ய (wear and tear ஐ) rebuild செய்ய (boredom) ஒருநாள் 3 வேளை வால்நட் சாப்பிட்டு பிறகு 'உள்ளம்' அல்லது 'மனம்' புதுப்பிக்கப்பட (repair, rejuvenate) தினம் ஒரு வேளை என மூன்று தினம் அக்ரிமனி சாப்பிட்டு பார். உடம்பில் புல்லரிப்பு ஏற்படும். புத்துணர்ச்சி ஏற்படும். புது மனிதன் (new lease of life) ஆகிவிட்டது போல் உணர்வாய். புது இரத்தம் ஓட ஆரம்பிக்கும். Rejuvenation, reformation, invigoration. (Inspiration பெற வைல்டு ஓட்)

---

† அக்ரிமனி உனது எல்லா வியாதிகளை குணமாக்குவதோடு இளமையையும் மீட்டு கொடுக்கிறது.

ஓக் என்ற மருந்து சாப்பிடுவதால் வயது ஆக ஆக வரும் வியாதிகள் தடுக்கப்படுகின்றன. (Retard old age)

இருப்பது இன்னும் மோசமாகாமல் இருக்க — ஓக்.

வாலிபம் திரும்ப — அக்ரிமனி + வால்நட் + ஆலிவ்.

(A) பீச் சாப்பிட்டு வர உணவை நேரத்திற்கு உண்பாய். அனுவசியமாக, அதிகமாக கொரிக்க மாட்டாய். தேவையான walking போன்ற exercise செய்வதால் 25% வியாதிகள் காணுமல் போய் விடும்.

(B) ஸெராட்டோ சாப்பிட்டு வர (diagnosis) 'சரியான' டாக்டரை ('நல்ல' டாக்டர் என்று நான் எழுதவில்லை என்பதை கவனி) அணுகி அவர் அறிவுரைப்படி நடப்பதால் 50% வியாதிகள் காணுமல் போய் விடும்.

(C) வாட்டர் வயலட் சாப்பிடுவதால் (specialist) (differential diagnosis) சொத்தைப் பல் இருப்பது தெரிய வந்து அதை பிடுங்கி விடுவதால் உனது தாங்க முடியாத மூட்டு வலி காணுமல் போய் விடும். (உனக்கு உடல்நிலை சரியில்லாத போது டாக்டரிடம் செல்லும் முன்பு வாட்டர் வயலட் சாப்பிடுவதால் ஐந்தாறு டாக்டர்கள் சேர்ந்து உன்னை கவனித்து (fees கூட வாங்காமல்) தேவையானல் இரண்டு மூன்று major surgery கூட செய்து பிழைக்க வைப்பார். தவிர, அந்த ஆபரேஷனுக்கு நீ செலவழித்த பணம் போல் மூன்று மடங்கு ஏதோ ஒரு வழியில் பிற்காலத்தில் உன்னிடம் வந்து சேர்ந்து விடும்.

(D) அக்ரிமனி சாப்பிடுவதால் உனது வியாதிகள் 95 to 100% காணுமல் போய் விடும். இது எப்படி சாத்தியம் என இப்போது பார்ப்போம். அதாவது, 'சர்வரோக நிவாரணி' அல்லது panacea, elixir of life, rejuvenator போல் அக்ரிமனி எப்படி வேலை செய்கிறது எனில்.

மனித வியாதிகளைப் பொறுத்தவரை உடல் வியாதி, மன வியாதி (psychiatric illness) என்று தனித் தனியாக கிடையாது. உடலில் பாதிப்பு வந்தாலும், மனதின் ஒரு பகுதியையும் அது பாதிக்கும். இதே போல் (கெட்ட செய்தி கேட்டு, மூளையில் கட்டி) மனபாதிப்பு ஏற்பட்டு மூளை வேலை செய்யாவிட்டாலும் ஏதாவது ஒரு உடல் உறுப்பில் கண்டிப்பாக பாதிப்பு ஏற்படும். There is a two-way relationship between mind and body. மன பாதிப்பினுல் உடல் (உறுப்புகளில்) பாதிப்பு ஏற்படும். உடல் பாதிப்பினுல் மனமும் பாதிக்கப்படும்.

It is the world's worker and not shirker who gets peptic ulcer. (Lynda John in the *BRITISH YEAR BOOK OF WAR MEDICINE*, 1939)

உடல் வியாதியால் மனம் பாதிக்கப்பட மாட்டாது எனில் எவனும் டாக்டரிடம் செல்லவே மாட்டானே?

ஹோமியோபதி மற்றும் பாட்ச் மலர் மருத்துவ முறைகளில் மனநிலைகளுக்கு ஏற்றவாறு மருந்து கொடுக்க மனம் சரியாவதோடு மட்டுமில்லாது உடல் வியாதிகளும் சரியாகின்றனவே.

(A) ராக் ரோஸ் என்ற மருந்தில், நீச்சல் தெரியாத சிறுவன், தன்னை விட வயது, எடை அதிகம் உள்ள ஆற்றில் மூழ்கும் நபரை காப்பாற்றுகிறான். (ராக் ரோஸ் என்ற மருந்து சாப்பிட அல்லது பாசிடிவ் தன்மையாளராக உள்ளவரின் மூளை ஆஃப் செய்யப்பட்டு கடவுள் இவன் உடலில் புகுந்து இவன் கை, கால்களை அசைத்து மூழ்குபவனை காப்பாற்றுகிறார்.

(B) ஸ்வீட் செஸ்ட்நட்: கடவுள் அனுக்கிரஹம் கிடைப்பதால் கடவுள் தூர இருந்தபடியே வியாதியால் சீரழிந்து போன உறுப்புகளை ஒரே நொடியில் சரி செய்து விடுகிறார்.

(C) அக்ரிமனியில் இவனே கடவுளாக ஆகி விடுவதால் (Man is God in ruins—Emerson) கடவுளிடம் வியாதிகள் இருக்க முடியாததால 95-100 சதவிகித வியாதிகள் அக்ரிமனி சாப்பிட குணமாகின்றன. அல்லது குணமாவதற்கு வேண்டியவைகளை 'ஆட்டோமேடிக்' ஆக செய்து விடுகிறான்.

உடல் சோர்வுக்கு (tiredness) — ஆலிவ்

மூளைச்சோர்வுக்கு (boredom) — [illegible]

மனம் புத்துணர்ச்சி பெற (transformation) — அக்ரிமனி

உனக்கு வியாதி வந்து வீட்டில்/ஆசுபத்திரியில் படுத்திருக்கும் நாட்களில் வாட்டர் வயலட் சாப்பிடு. (டாக்டரிடம் சென்று பேசுவதற்கு முன்பு மட்டும் 'அக்ரிமனி' சாப்பிடு.)

இயற்கை (அக்ரிமனி மூலமாக) சொல்லும் இரகசியம்: "அகரிமனி சாப்பிடுவதால் அதிகம் பேச மாட்டாய். அதிகம் பேசாததால் எப்படி வியாதிகள் குறைகின்றன? கடவுள் பேசுவதே இல்லை. அவரிடம் வியாதிகளும் இல்லை. ஆகையால் பேசாதவனிடத்தில் வியாதிகள் கிடையாது."

அதிகம் பேசுபவனிடத்திலும் ஜோக் நிறைய சொல்பவர்கள் மற்றும் எல்லா சிரிப்பு நடிகர்களிடத்திலும் நிச்சயமாக நிறைய பயங்கர வியாதிகள் மற்றும் பிரச்சினைகள் இருக்கும்.

வியாதி தீவிரமாக உள்ளவனுக்கு முதலில் ஓய்விற்காக ஆபீஸ் போகாமல் வீட்டில் இருக்கச் சொல்கிறார்கள். ஓய்வு என்றால் உடலுக்காக அல்ல. அலுவலகத்தில் அதிகம் பேச வேண்டியிருக்கும் என்பதால் 'வாய்க்கு' ஓய்வு கொடுக்க வீட்டில் இருக்கிறான்.

வியாதி தீவிரம் ஆக, ஆசுபத்திரியில் சேர்த்து பார்வையாளர்கள் மாலே 4 p.m. to 8 p.m. மட்டும் அனுமதிக்கப்படுகின்றனர். வியாதி இன்னும் தீவிரம் ஆகிவிட்டால், தீவிர சிகிச்சை பிரிவில் (I.C. Unit) சேர்த்து, மற்ற எவரும் எப்போதும் உள்ளே போக முடியாதபடி செய்து விடுகின்றனர்.

லங்கணம் பரம ஔஷதம்.
மௌன விரதம் மிக பரம ஔஷதம்.

அக்ரிமனி பணம் சம்பாதிக்க மற்ற எல்லா மருந்துகளே விட 'டாப் டக்கர்' ஆக வேலே செய்கிறது. ('பணம்' என்ருல் செல்வம், அந்தஸ்து, கௌரவம், தொழில் அறிவு விருத்தி, வாழ்க்கையில் அமைதி, மேன்மை என்று படிக்க வேண்டும்)

(A) ஒவ்வொரு மாதக் கடைசியிலும் ஐநூறு ரூபாய் கடன் வாங்குகிருன் சிக்கரி டைப். இம்மருந்து சாப்பிட deptl. exam. எழுதி அடுத்த பதவி உயர்வு அல்லது part-time வேலே போன்று கிடைத்து அந்த பற்ருக்குறை ஐநூறு சம்பாதித்து விடுகின்ருன்.

(B) பல ஆயிரங்களேப் பற்றி கேட்டவுடன் 'ஏ அப்பா!' என்று சொல்லும் நபர் ஹார்ன்பீம் சாப்பிட ஆயிரக்கணக்கில் வருமானம், மதிப்பு, status பெறுகிருன்.

(C) தேவைக்கேற்றபடி பணம் சம்பாதிக்கிருன் - வைல்டு ரோஸ்

(D) அக்ரிமனியில் telescopic rate-ல் சம்பாதிக்கிருன், அவன் செய்யும் வேலே ஒரு தடவை பலன் கொடுப்பதோடில்லாமல் அது மேலும் புதிய வாடிக்கையாளர்களே கவர்ந்து இழுத்து வருகிறது. ஒன்று பத்தாக, பத்து நூருக, ஆடு குட்டி போடுவது போல் விருத்தி யாகிறது.

(E) டாக்டர் தொழிலில் டெலஸ்கோப் ரேட்டில் எப்படி நிறைய நோயாளிகள் வருகிருர்கள் என பார்ப்போம். ஒரு டாக்டர் கிளினிக் ஆரம்பித்து ஒரு மாதத்தில் இருபது நோயாளிகளுக்கு வைத்தியம் செய்கிருர் என வைத்துக் கொள்வோம். அதில் மூன்று நபர்களுக்கு குணம் கிடைத்தால் கூட இந்த மூன்று நபர் தலா பத்து புதிய நோயாளிகளே அழைத்துக் கொண்டு வருவார்கள். ஆனுல் குணம் கிடைக்காத மீதி 17 நோயாளிகள் அவருக்கு எதிராக பிரச்சாரம் செய்ய மாட்டார்கள். ஆகையால் திறமைசாலியாக ஒரு டாக்டர் இல்லாவிட்டாலும் கூட, நிறைய நோயாளிகளே குணம் செய்யாமலேயே (அதிர்ஷ்டவசமாக குணமான ஓரிரு நோயாளிகள்

மூலமாக) டெலஸ்கோப் ரேட்டில் பெயர் பரவும். இதுதான் வைத்தியத் தொழிலில் உள்ளோர் (டாக்டர்கள்) கொடிகட்டிப் பறப்பதின் இரகசியம். வைத்தியத் தொழில் மட்டுமே நிச்சயமாக டெலஸ்கோப் ரேட்டில் வருமானத்தை அதிகரிக்கச் செய்யும். (டாக்டர்கள் மன்னிப்பார்களாக!) (இவன் வைத்திருக்கும் ஸ்டெதாஸ்கோப்-ல் 'ஸ்கோப்' என்று வருவதை கவனி.)

ஆனால் மற்ற தொழிலில் உள்ளவர்கள் அக்ரிமனி சாப்பிட்டு வர அவர்களின் தரம் உயருவதால் அவர்களுக்கு டெஸ்கோப் ரேட்டில் வாடிக்கையாளர்கள் பெருகுவார்கள்.

'Tele' என்ற வார்த்தையை மனதில் வைத்துக் கொண்டாலும் 'remote' 'wireless' என்றாலும் அக்ரிமனி உபயோகமாகும் நிலைமைகளை சுலபமாக ஞாபகத்திற்கு கொண்டு வந்து விடலாம். (இன்பம், சுகம் என்பது கண்ணால் பார்க்க முடியாது. அனுபவிக்க மட்டுமே முடியும்.)

Telescope, telegram, telephone, telepathy, telescopic rate

மின்சார பில் டெலஸ்கோபிக் ரேட் என்பர். முதல் நூறு யூனிட் வரை ஒவ்வொரு யூனிட்டுக்கும் சார்ஜ் ஒரு ரூபாய் எனில் நூறு யூனிட்டிற்கு மேல் ஒரு யூனிட்டிற்கு ரூ. 1=50 என்று கட்ட வேண்டும். இருநூறு யூனிட்டிற்கு மேல் ஒரு யூனிட்டிற்கு ரூ. 2.25 என்று, யூனிட்டுகள் அதிகம் ஆக ஆக ராக்கெட் வேகத்தில் பில் கட்டணம் ஏறும். இதைத்தான் டெலஸ்கோபிக் ரேட் என்பர்.

நீ மாதம் ஐயாயிரம் சம்பாதித்தால் அக்ரிமனி சாப்பிட்டு வர அந்த ஐயாயிரம் சம்பாதிக்க செய்த வேலை குட்டி போட ஆரம்பிக்கும்.

ஆடு பல குட்டி போட்டு தனது இனத்தை பன்மடங்காக விருத்தி செய்வது போல் உன் வருமானம் டெலஸ்கோப்ரேட்டில் பன்மடங்காக பெருக அக்ரிமனி.

டாக்டர் இராகவன் என்பவருக்கு மாதம் பன்னிரண்டாயிரம் வருமானம். நோயாளிகளிடம் மருந்து எப்படி சாப்பிட வேண்டும், பத்தியம் போன்றவற்றைப் பற்றி மிகுந்த சிரத்தையுடன் சொல்வார். அக்ரிமனி சாப்பிட்டு வர (இதனால் இவர் வாயை மூடிக் கொண்டு இருந்ததால்) தன் பிரச்சினைகளின் உண்மை காரணம் பற்றி நோயாளி பேசியதால், நோயாளி வீட்டில் அல்லது அலுவலகத்தில் உள்ள பிரச்சினைகளை எவ்வாறு தீர்ப்பது என்று சொல்லிக் கொடுத்து, பல கேசுகளில் மருந்து இல்லாமலேயே நோயாளிகளை குணமாக்கி இதனால் இவரது பெயர் பரவ ஆரம்பித்தது.

ஆகையால், புற்றீசல் போல் நோயாளி வருவது பெருகியது.

(A) நோய்க்கு மருந்து கொடுத்து சரி செய்கிறுன் - ஸெராட்டோ மற்றும் ரெட்செஸ்ட்நட்

(B) மனிதனுக்கு (அவனது மனக்கண்ணேட்டம், தவருன அபிப்பிராயம்) ஆகியவற்றை சரி செய்து நோயாளியை (நோயை) அல்ல, குணமாக்குகிறுன் அக்ரிமனி டைப் டாக்டர்.

இதனுல்தான் ஹோமியோபதியும், பாட்ச் மலர் மருத்துவமும் மற்ற முறைகளை விட விரைவாக, மலிவாக, முழுவதுமாக நோயாளிகளை நிரந்தரமாக குணமாக்க முடிகிறது.

உனது வாழ்க்கைத் தரம், செல்வம், அறிவு, ஞானம் முதலியன ராக்கெட் வேகத்தில் முன்னேற அக்ரிமனி ஒன்றே வழி என்று நாம் சொல்லவில்லை. இதற்கு இணையாக திருவண்ணுமலை (இரமணுஸ்ரமம்) சென்று அங்கு 72 மணி நேரத்திற்கு குறையாமல் தங்கி (எவருடன் பேசாமல்) மௌன விரதம் இருந்து இரமண மகரிஷியை தியானம், பிரார்த்தனை செய்து வருவதும் அதே பலன் கொடுக்கும். அங்கு சென்று தங்கியிருக்கும் போது தினம் தினம் ஊருக்கு (உன் வீட்டிற்கு) S.T.D. ஸெல் ஃபோனில் பேசாதே!

திருவண்ணுமலையில் உள்ள இரமண மகரிஷி ஆஸ்ரமத்திற்கும் அக்ரிமனிக்கும் என்ன சம்மந்தம் அல்லது ஒற்றுமை எனில் ஞானி அல்லது மகரிஷிகளில் மிகக் குறைவாக பேசியவர் பகவான் இரமணர் தான்.

ஸ்வீட்செஸ்ட்நட் டைப் நபர் உன் காதில் அல்லது உன்னை தொட்டு உபதேசம் செய்கிருர். அக்ரிமனி டைப் நபர் ஏதும் பேசாமலேயே பார்வையாலேயே (தூர இருந்தபடியே) தீட்சை கொடுக்கிருர். இரமண மகரிஷி மட்டுமே இவ்வாறு செய்துள்ளார்.

அதிகம் பேசாமை, மௌனம், நிசப்தம். ஆம் அந்த ஆசிரமத்தின் உள்ளே சென்ருல் உன் ஸெல் ஃபோன் கூட வேலை செய்யாது.

(A) திருப்பதி சென்று (உண்டியல் அருகில் நிற்கும் குபேரனின் தரிசனம் கிடைத்து) வர உன் வருமானம் இரட்டிப்பாகும். (மஸ்டர்டு)

(B) திருவண்ணுமலை சென்று வர பன் மடங்கு ஆகும். (வருமானம் என்ருல் செல்வம், சந்தோஷம், மன அமைதி, பிரச்சினைகள் இல்லாதிருத்தல் போன்றவை) மேலும் சொல்கிறேன். திருவாரூரில் பிறந்தால் முக்தி. காசியில் இறந்தால் முக்தி. திருவண்ணுமலையை நினைத்தாலே முக்தி.

[திருவண்ணுமலை பற்றி பலருக்கு தெரிந்திராத ஒரு விபரம் இப்போது சொல்கிறேம். கிரிவலம் வரும் போது கையில் ஐந்து லிட்டர் கேன் எடுத்துச் செல். வழியில் மலையை சுற்றிவுள்ள ஒரு கிலோமீட்டர் இடைவெளியுள்ள பல போர் பம்ப் (கையால் அடிக்கும் பம்ப்)பிலிருந்து சுமார் அரை லிட்டர் அளவு தண்ணீர் அடித்து கேனில் நிரப்பிக் கொள். இதை தினம் 3 அவுன்சு சாப்பிட்டு வா. தவிர தினமும் குளிக்கும் போது ஒரு தம்ளர் நீரை ஒரு பக்கெட் தண்ணீரில் கலந்து குளி. இதனுல் உனது வாழ்க்கைப் பிரச்சினை, வியாதிகள் 95 சதவிகிதத்திற்கு மேல் நீங்கி விடும். அக்ரிமனி பாசிடிவ் தன்மை பெற இது ஒரு சிறந்த குறுக்கு வழி.]

**அக்ரிமனி என்ற மலர் மருந்தின் பாசிடிவ் தன்மைகள் நம்முள் வளர வேறு பல வழிகளும் உள்ளன. ஒரு சிலவற்றைப் பார்ப்போம்.**

True art is to hide art என்று சொல்வர். Campact, vanity, vanity bag, டம்பப்பை என்பதெல்லாம் நெகடிவ் அக்ரிமனி சமாச்சாரங்கள்.

Pandora Box: ஆதிமனிதனுக்கு கடவுள் எல்லா இடத்தில் எல்லா சௌகர்யங்களையும் கொடுத்து, ஆனுல் குறிப்பிட்ட இடத்தில் உள்ள ஒரு சிறிய பெட்டியை மட்டும் (பண்டோரா பெட்டி) திறக்கக்கூடாது என்று சொன்னுர். திமிர் பிடித்த மனிதன் பண்டோரா பெட்டியை திறக்க அதிலிருந்து வியாதி, தரித்திரம், கடன், சச்சரவு எல்லாம் வெளியே வந்து அவனை சூழ்ந்து கொண்டன. பண்டோரா பெட்டியை மறுபடியும் மூட அக்ரிமனி.

கண்ணெடு கண் நோக்குஒக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில.

அக்ரிமனி கடவுள் சம்பந்தப்பட்டது. குரு ஆசீர்வாதம் இல்லாமல் கடவுளிடம் செல்ல முடியாது. கேட் மூடிக்கொண்டு விடும். கடவுளிடம் செல்ல (சினிமா தியேட்டர் உள்ளே செல்ல காசு கொடுத்து டிக்கெட் வாங்கி, கேட்டில் காண்பித்து விட்டு செல்வது போல்) இந்நூலாசிரியருக்கு குருதட்சணை கொடுத்து விட்டு சென்றுல், கேட் திறந்து உனக்கு வழி விடும்.

(A) சொர்க்க வாசல், கடவுள் இருக்குமிடம் எங்கே (எந்த ஊர், தெரு) இருக்கிறது என்று தெரிய Water Violet

(B) தெருவில் எந்த நம்பர் வீட்டில் உள்ளது என்று தெரிய அக்ரிமனி.

(C) அதனுள் செல்ல குரு தட்சணை.

குருதட்சணை கொடுக்காவிட்டால் one-way யில் எதிர்புறமாக சென்று போலீஸில் மாட்டிக் கொள்வதோடு மட்டுமில்லாமல் எதிரே (நேர் வழியில்) வரும் நபர்கள் எல்லோரிடமும் வசவு, திட்டு வாங்கிக் கொள்ள நேரிடும். இதனால்தான் சிலர் அக்ரிமனி சாப்பிட எதிர்மாறான பலன் பெறுகின்றனர்.

ஜெயில் தண்டனை அனுபவித்து வரும் கைதிகள் விடுதலை பெற அல்லது கோர்ட் கேஸ்களில் ஜெயிக்க — அக்ரிமனி. (நீ சாப்பிடுவதோடில்லாமல் உனக்காக வாதாடும் வக்கீலுக்கும் கொடு.

சௌந்தர்யம் - அழகு, எழில், beauty, grace.

லட்சணம் - beauty; perfection, proper quality

["தைரியம் தானே வீரனின் லட்சணம்?" "உத்யோகம் புருஷ லட்சணம்]"

வாசகர்களுக்கு சிறிதளவாவது perfection-க்கு ஆசை இருந்தால்தான் அக்ரிமனி பற்றி புரிந்து கொள்ள முடியும். ஆகையால், மேலே தொடர்ந்து படிப்பதை நிறுத்தி விட்டு 'பீச்' என்ற மலர் மருந்து 2-3 தினம் சாப்பிட்டு அதன்பிறகு மேலே தொடர்ந்து படியுங்கள்.

நவக்கிரகங்களில் 'கேது' என்ற கிரகத்தை 'ஞானகாரகன்' (ஞானத்திற்கு அதிபதி) என்பர். உனது ஜாதகத்தில் கேது (ஞானகாரகன்) நன்றாக/நல்ல இடத்தில்/நல்லவனுடன் சேர்ந்து அல்லது பார்க்கப்பட்டால்தான் நீ இவற்றை புரிந்து கொள்ள முடியும். இப்படி இல்லையெனில் கேது கிரஹத்திற்கான வைடூரியம் (விலை 1500க்கு மேல்) வாங்கி அணிந்து கொண்டு மேலே படிக்கவும்.

ஒருவனது தீராத நோய், பிரச்சினைகளுக்கு எல்லா முயற்சியும் செய்து கடைசியில் ஜாதகத்தை கொண்டு போய் ஜோஸ்யரிடம் காண்பிக்கிறான்.

<u>குறிப்பிட்ட காரியம் தொடங்க:</u>

| | | |
|---|---|---|
| நல்ல நாள் பார்க்க | ... | வாட்டர் வயலட் |
| உன் ஜாதகத்தை முழுவதும் ஆராய சரியான ஜோஸ்யர் கிடைக்க | ... | அக்ரிமனி |

bacheler (மணமாகாத ஆண்) - தனக்கு நன்றாக அலங்காரம் செய்து கொள்கிறான் - பீச்

நல்ல அழகான பெண் பார்த்து திருமணம் செய்து கொண்ட பின்பு மனைவிக்கு நகை, பட்டு புடவை வாங்கி அவளை அலங்கரித்து மகிழ்கிறான் - ஸெராட்டோ

குழந்தை பெற்று அவர்களை வளர்த்து பெரிய மனிதர்களாக ஆக்கி ('என் பையன் நோபல் பரிசு வாங்கியவன்' என்று மார் தட்டி பேச) - வாட்டர் வயலட்/வைல்டுரோஸ்.

தான் பேணி வளர்த்த குழந்தைகள் தன்னை சரியாக கவனித்து பராமரிக்காததால் 'உலகே மாயம், வாழ்வே மாயம்' என்று ஞானத்தை தேடி புறப்படுகிறான் (வயதான காலத்தில்) - அக்ரிமனி.

முட்டாள் மனிதன் கடவுளை நம்புகிறானோ இல்லையோ, டாக்டரை (ஸெராட்டோ) நம்புகிறான். ஸ்பெஷலிஸ்ட்டை (வாட்டர் வயலட்) பயபக்தியுடன் பார்க்கிறான். மரியாதை கலந்த பயபக்தியுடன் (அக்ரிமனி) ஜோஸ்யரிடம் சென்று கேட்கிறான்.

ஜோஸ்யம் என்பது வேதத்தின் ஒரு அங்கம். வேதத்திலிருந்துதான் கடவுள் தோன்றினார். ஆகையால் ஜோஸ்யர் சொல்வது கடவுள் பேசுவதற்கு சமம்.

உண்மையான ஜோஸ்யர் உனக்கு கிடைக்க - அக்ரிமனி.

உருவக கதை எழுதுபவர் ஐம்பது சதவிகித மார்க் வாங்கிய அக்ரிமனி அல்லது வாட்டர் வயலட் டைப் நபர்.

''இதற்கு மேல் அக்ரிமனி பற்றி விளக்க முடியாது'' என்று இயற்கை சொல்கிறது.

<u>பின்குறிப்பு:</u> மனம் தெளிவடைய, மனதில் சாந்தி நிலவ, மனம் நிர்மலமாக வால்நட்/அக்ரிமனி தான் ஒரே வழி என்று நாம் சொல்லவில்லை. வேறு பல வழிகளையும் இயற்கை அளித்துள்ளது.

---

† உன் குழந்தை நோபல் பரிசு வாங்கும் விதத்தில் அவனை வளர்க்க, சரியான கல்லூரியில் சரியான படிப்பு படிக்க வைக்க, நீ வாட்டர் வயலட் மற்றும் செஸ்ட்நட்பட் வாரம் மூன்று தடவை சாப்பிட்டு வா. இதனால் மண்டு போன்ற ஆங்கில பத்திரிக்கைளை (அ)கவுரவத்திற்காக படிப்பதை தொலைக்காட்சியில் பெண்கள் மாதவிடாயின் போது உபயோகிக்கும் நாப்கின் விளம்பரங்களையும் பார்ப்பதை நீ ஒழித்து விட்டு *THE EDUCATIVE PROCESS, AN OUTLINE OF PSYCHOLOGY, THE PHYSIOLOGY OF MIND* போன்ற குழந்தை வளர்ப்பு புத்தகங்களை படித்து உன் பையனை ஒரு ஜனாதிபதி அல்லது (இலஞ்சம் வாங்கிய முதன் மந்திரியை ஜெயிலுக்கு அனுப்பிய) சுப்ரீம் கோர்ட் நீதிபதி ஆக ஆக்கி விடுவாய்.

(1) கமலா ஆரஞ்சுப்பழம் தினம் காலை வெறும் வயிற்றில் ஒன்று என தொடர்ந்து நாற்பத்தி இரண்டு நாட்கள் சாப்பிட்டு வர சாராயம் குடிப்பதை நிறுத்தி விடுவான். அப்படியெனில் அவன் மனம் குடிக்கக்கூடாது என்று எவ்வளவு தெளிவடைகிறது?

ஆரஞ்சு பழத்தில் எல்லா சத்துக்களும் உள்ளன. ஒரே ஒரு சத்து தவிர. அது உயிர்ச்சத்து. உயிர்ச்சத்து (vitality) பாலில் உள்ளது. பாலும் ஆரஞ்சு பழமும் சாப்பிட்டு வந்தால் எல்லா சத்துக்களும் நமக்கு கிடைத்த மாதிரி. தினசரி இரவு படுக்கு முன்பு பால் (பசும்பால் கிடைத்தால் இன்னும் நல்லது) காலை வெறும் வயிற்றில் தினசரி ஒரு ஆரஞ்சு பழம் என தொடர்ந்து 2-3 மாதங்கள் (உணவில் புளி, நல்லெண்ணை, கடுகு, மிளகாய் நீக்கி) சாப்பிட்டு வர உனக்கு தேஜஸ் உண்டாகி எல்லோரும் உனக்கு அடிபணிந்து அவர்கள் சொத்து, பணம் ஆகியவற்றை உன் காலடியில் விட்டுச் செல்வர். உனது வியாதிகளும் தீர்ந்து விடும்.

(தனக்குத்தானே அழகு செய்து கொள்கிறாள் அல்லது மற்றவர்களைக் கூப்பிட்டு தனக்கு தலை வாரி விடச் சொல்லி) 'அழகு' செய்து கொள்கிறாள் (மன திருப்தி) - ஜென்ஷன்

| | |
|---|---|
| (A) திருமணத்தன்றும், பெண் பார்க்க வரும் தினத்தன்றும் மட்டுமே மற்றவர்கள் மணப்பெண்ணை (அவள் கேட்காமலேயே) 'அலங்காரம்' செய்கிறார்கள். (திருமணம் என்பது சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்ற கடவுள் செய்யும் வேலை) | அக்ரிமனி |
| (B) கோயிலில் அம்மனுக்கு தினம் தினம் 'அலங்காரம்' செய்கிறார்கள். -உள்ளத்தில் சந்தோஷம்- | அக்ரிமனி |

(A) மன திருப்தி என்பது எதிர்பார்த்தது கிடைத்து ஏற்படுவது ... ... ... ... ... ... ஜென்ஷன்

(B) சந்தோஷம் என்பது எதிர்பார்க்காதது கிடைத்து ஏற்படுவது ... ... ... ... ... ... அக்ரிமனி

(A) உன் குழந்தைக்கு ஃபாரீன் பேனா வாங்கிக் கொடுப்பதாக முன்கூட்டியே சொல்கிறாய். ஃபாரீன் பேனா என்றால் (இப்படி இருக்கும், அப்படி இருக்கும் என்று) சிறிது எதிர்பார்ப்பு அதன் மனதில் இருக்கும். பேனா வாங்கி கொடுத்தவுடன் அது

எதிர்பார்த்த விதத்தில் இல்லாவிட்டால் 'வருத்தம்' ஏற்படுகிறது
— நெகடிவ் ஜென்ஷன்

(B) நீ முன்கூட்டியே ஏதும் சொல்லாமல் திடீரென்று ஒரு இந்திய தயாரிப்பு பேனா வாங்கி உன் குழந்தைக்கு பரிசாக (அது ஏதும் முன்கூட்டியே எதிர்பார்க்காமலேயே) கொடுக்கிறாய். பேனா எப்படி இருந்தாலும் அதற்கு 'சந்தோஷம்' உண்டாகிறது

— பாசிடிவ் அக்ரிமனி.

<u>நெகடிவ் அக்ரிமனி டைப் நபர் சொல்லும் வார்த்தைகள் :</u>

"I will take it to my heart." "I have taken in it to my heart".

நண்பனிடமிருந்து நீ கடனாகிய வாங்கிய ஐம்பதாயிரம் ரூபாயை ஒரு மாதத்தில் திருப்பிக் கொடுப்பதாக சொல்லி விட்டு இரண்டு மாதம் கழித்தும் திரும்ப வராததால், அவன் உன்னிடம், "நீ இன்னும் ஒரு வாரத்தில் தராவிட்டால் I shall take it to my heart" என்று சொன்னால் உடனடியாக உன் தலையை அடகு வைத்தாவது பணத்தை திருப்பி கொடுத்து விடு. ஏனெனில் "I shall take it to my heart" என்று அவன் சொன்னால் அவனை நீ நெகடிவ் அக்ரிமனி-டைப் ஆக மாற்றி விட்டாய் என்று அர்த்தம். இதை விட பாதக செயல் இருக்க முடியாது. நீ ஒருவனை நெகடிவ் அக்ரிமனி டைப் ஆக்கி விட்டால், நீயும் அவ்வாறே பத்து மடங்கு துடிதுடிக்க நேரிடும். நீ ஏமாற்றியது அரை இலட்சம். பின்னால் இழக்கப்போவது ஐந்து லட்சம்.

வாக்குத் தவறுதல், சொன்ன வாக்கை காப்பாற்றாமல் போவது ஆகியவை நம்மை பிற்காலத்தில் மிகுந்த கஷ்டத்திற்கு உள்ளாக்கி விடும். நம்பிக்கைத் துரோகம் செய்வதால் நீ ஒரு நெகடிவ் அக்ரிமனி டைப் நபரை உருவாக்குகிறாய். இதைவிட கொடூரமான செயல் உலகில் இருக்க முடியாது.

Don't make false promises

Honesty pays என்பது பாசிடிவ் அக்ரிமனி டைப் தன்மைகளை நம்முள் உருவாக்கும்.

முன்காலத்தில் படிப்பு ஏதுமில்லாத ஒருவன் மளிகைக்கடையில் வேலை செய்து வந்தான். மாதச்சம்பளம் நாற்பத்தி ஐந்து ரூபாய். (அந்த காலத்தில் முப்பது ரூபாய் இருந்தாலே எவ்வளவு தாராளமாக செலவு செய்தாலும் ஒரு குடும்ப மாத செலவுக்கு போதுமானது). ஆனால் நிறைய

பொய் சொல்லித்தான் ஆக வேண்டும். புளி கிலோ ஒரு ரூபாய்க்கு வாங்கி இரண்டு ரூபாய்க்கு விற்க வேண்டும் என்பது கடை முதலாளி உத்தரவு. எவராவது குறைத்து கேட்டால் "எங்களுக்கு அடக்கவிலேயே இரண்டு ரூபாய். எப்படி குறைத்து கொடுக்க முடியும்?" என்று பொய் சொல்ல வேண்டும். இந்த வேலைக்காரனுக்கு ஒரே வருடத்தில் கோடீஸ்வரனுக ஆக வேண்டும் என்று ஆசை. ஒரு சாதுவிடம் சென்று இதற்கு வழி இருக்கிறதா என்று கேட்க அவர் honesty pays (பொய் சொல்லாமல், நேர்மையாக இருந்தால் நீ பல கோடிகளுக்கு ஒரே வருடத்தில் அதிபதியாகலாம்) என்று சொன்னுர்.

தினம் தினம் வாடிக்கையாளர்களிடம் பொய் சொல்லிய வேலையை உதறி விட்டு (நேர்மையாக இருக்கும்படியான) வேறு வேலை தேடி புறப்பட்டான். ஒரு செல்வந்தரிடம் போய் வேலை கேட்க அவர் அவனை தனது அந்தரங்க உதவியாளராக இருக்கச் செய்து தனக்கு கடன் கொடுத்தவர்கள் வந்தால், தான் வெளியூர் சென்றிருப்பதாக பொய் சொல்லச் சொன்னுர். இதற்கு இவன் உடன்படாததால் அந்த வேலை வேண்டாம் என்று உண்மை மட்டும் பேசக்கூடிய வேலை தேடி அலைந்து, மனைவி, குழந்தைகளை பிரிந்து பல ஊர்கள் சென்ருன். இறுதியாக ஒரு விவசாயிடம் சென்று வேலை கேட்க, அந்த விவசாயி தனக்கு வேலைக்கு ஆள் தேவையில்லை எனவும், ஆனுல் தரிசாக கிடக்கிற தனது ஒரு ஏக்கர் நிலத்தில் அவனை உழச் செய்து, இதனுல் அதில் வரும் நெல்லில் பாதியை தான் எடுத்துக் கொண்டு மீதி நெல்லுக்கு இரண்டு வேளை சாப்பாடு போடுவதாகவும் சொல்ல இவனும் ஒப்புக் கொண்டு வேலை செய்து வந்தான். சம்பளமாக வருட முடிவில் அரையணு கொடுப்பதாக பேச்சு. ஒரு வருடம் முடிந்தவுடன் அரையணுவை பெற்றுக் கொண்டு இதை வைத்துக் கொண்டு ஊருக்கு செல்ல முடியாததால் தனது மனைவி, குழந்தைகளுக்கு இரண்டு கொய்யாப்பழம் வாங்கி (அக்காலத்தில் கூரியர், தபால் ஆபீஸ் ஆகியவை கிடையாது) அந்த ஊர் சத்திரத்தில் தங்கியுள்ள வழிப்போக்கர்களிடம் தனது கிராமத்திற்கு செல்பவர் எவராவது இருக்கிருர்களா என பார்த்து அவரிடம் பழங்களை தன் குடும்பத்தினருக்கு கொடுத்தனுப்பினுன். அந்த வழிப்போக்கன் வழியில் இன்னெரு ஊர் சத்திரத்தில் தங்கியிருந்த போது, அவ்வூர் அரசனுக்கு திடீரென கடுமையான வயிற்று வலி அதிகமாகி இதற்கு அரச வைத்தியர் கொய்யாப்பழ சதைப்பகுதியில் ஒரு சூரணம் கலந்து கொடுத்தால் ஒழிய வேறு வழியில்லை என்று சொல்ல, ஆனுல் அவ்வூரில் கொய்யா மரமே கிடையாது என்பதால் உடனே மந்திரி சேவகர்களை அனுப்பி சத்திரத்தில் வழிப்போக்கன் எவரிடமாவது கொய்யாப்பழம் இருக்கிறதா என்று கேட்க,

அந்த வழிப்போக்கன் தன்னிடம் உள்ளது. ஆனால் ஒருவன் ஒரு வருட கூலியாக (நேர்மையாக உழைத்ததன் பலனாக) கிடைத்த அரையணாவில் கொய்யாப்பழம் மனைவி, குழந்தைகளுக்காக கொடுத்ததை தான் எவ்வாறு கொடுக்க முடியும் என்று சொல்ல, அந்த சேவகன் அது தனது அரசன் உத்தரவு என அதட்டி பழங்களை பிடுங்கிச் சென்று அரச வைத்தியரிடம் கொடுக்க அவர் அதை இரண்டாக வெட்டி உள்ளிருக்கும் சதைப்பகுதியை எடுத்து மருந்துடன் கலந்து கொடுக்க அரசனின் வலி குணமாகியது. அரசர் அக மகிழ்ந்து கொய்யாப்பழம் கொடுத்துதவிய வழிப்போக்கனுக்கு தனது நன்றி கூற எண்ணி சேவகனிடம் கேட்ட போது பின்னவன் நடந்ததை சொன்னான். பொய்யே சொல்லக்கூடாது என்பதற்காக மனைவி மக்களைகூட பிரிந்து தொலை தூரம் சென்று வருடம் அரையணா மட்டுமே கூலிக்காக வேலை செய்தவனை பாராட்டி, அவனது நேர்மைதான் பழ உருவத்தில் வந்து தனது வயிற்று வலியை குணப்படுத்தியது என்று மெச்சி, தனது நன்றி, பாராட்டுதலை தெரிவிக்க இரண்டாக வெட்டப்பட்டு கிடந்த கொய்யாப்பழ மேல் பகுதிகளை எடுத்து அதன் நடுவில் விலையுயர்ந்த மாணிக்கக் கற்களை வைத்து மூடி நன்றாக ஒட்டி இலையில் வைத்து கட்டி அதை பிரித்துப் பார்க்காமல் கொடுக்க வேண்டிய இடத்தில் கொடுத்து விடும்படி சொல்ல வழிப்போக்கனும் வீட்டில் கொடுத்து சென்றான். அவள் கொய்யாப்பழத்தை நறுக்க அதிலிருந்து மாணிக்க கற்கள் விழுந்தன. தனது கணவன் நிறைய பணம் சம்பாதித்து இரகசியமாக கொய்யாப்பழத்தின் நடுவில் வைத்து அனுப்பியுள்ளான் என்று நினைத்து பல கோடி ரூபாய் மதிப்புள்ள மாணிக்க கற்களை விற்று பங்களா, பட்டு புடவை, என்று சௌகர்யமாக இருந்தாள். அடுத்த வருடம் இன்றும் கடுமையாக வயலில் உழைத்து இதனால் வழிப்பயணத்திற்கு சிறிது காசு கிடைக்க அந்த நேர்மையாளன் குடும்பத்தை பார்க்க ஊர் திரும்பியதும் மனைவி மக்களை அடையாளம் தெரியாமல் ஒன்றும் புரியாமல் விழிக்க பிறகு ஒவ்வொன்றாக நடந்தவற்றை விசாரித்து தெரிந்து கொண்டு அந்த சாதுவிடம் சென்று நன்றி தெரிவித்தான்.

இதிலிருந்து நாம் தெரிந்து கொள்வது என்னவெனில் எவ்வளவு கடுமையாக, எவ்வளவு மணி நேரம் தினம் உழைக்கிறோம் என்பது முக்கியமல்ல. எவ்வளவு நாணயமாக, நேர்மையாக, பிறருக்கு தொந்தரவு, ஏமாற்றம் கொடுக்காமல் உழைக்கிறோம் என்பதுதான் முக்கியம்.

Honesty pays (several crores in due course.)
Hard work is not the secret.

பொறுத்தார் பூமியாள்வார்.
பொறுமை கடலினும் பெரிது.

இதுதான் அக்ரிமனி நமக்கு சொல்லும் பாடம். இப்படியில்லை-யெனில் ரோடில் வலது பக்கமாக (wrong side) அல்லது ஒருவழிப்பாதையில் எதிர் திசையில் சென்று விபத்து ஏற்படத்தான் செய்யும். போலீஸ் கேஸ் மற்றும் ஆஸ்பத்திரிதான்!

அக்ரிமனி சாப்பிட்டு வருவதால் நமது வியாதிகளில் 95 சதவிகிதத்திற்கு மேல் எப்படி குணமாகின்றன என்பதற்கு வேறு ஒரு விடையும் உள்ளது.

நோயை எவரும் நிச்சயமாக விரும்ப மாட்டார். ஆனுல் பல நோய்களை குணப்படுத்தும் வழி தெரியாமல் அவஸ்தைப்படுகிறோம். (தெரிந்தோ, தெரியாமலோ பல தவறுகளை செய்து அவற்றை நியாயப்படுத்தவும் செய்கிறோம். 'தொழிலில் பொய் சொல்வதெல்லாம் சகஜம்' என்று தவருன அபிப்பிராயம் பரவலாக காணப்படுகிறது.)

அக்ரிமனி சாப்பிட்டு வரும் போது அகக்கண் (ஞானக்கண் திறந்து) கொண்டு விடுவதால் நாம் (தெரிந்தோ, தெரியாமலேயோ) செய்யும் அநியாயங்கள் 'ஆட்டோமேடிக்' ஆக நின்று விடுவதால், வியாதிகள் இருந்த இடம் தெரியாமல் போய் விடுகிறது. நூறு சதவிகித கடவுள் தன்மைகள் நம்மிடம் தோன்றிஞல்தான் ஞானக்கண் திறக்கும்.

---

தபால் வழி பாடத்திட்டம்-2வது மாத பாட அட்டையின் பின்புறம் "இன்டர்நெட்டில் search engine போல் உபயோகப்படும் மருந்து எது" என்ற கேள்விக்கு ஸெராட்டோ மற்றும் ஹீதர் என எழுதியிருந்தோம்.

ஸெராட்டோ search engine எனில் வாட்டர் வயலட் என்ற மலர் மருந்தை "Advanced search engine" என நாம் உறுதியாக சொல்லலாம். நல்ல வீடு வாங்க ஸ்வீட் செஸ்ட்நட் சாப்பிட்டு, வீடு அல்லது flat பார்த்து பேசி விலை படிந்ததும், வீட்டு உள்ளே பார்க்க வேண்டும். எப்படியெனில்

(i) வீட்டு பத்திரங்களை வாங்கி வக்கீலிடம் காண்பித்து பிரச்சினை இல்லாமல் (clear title) உள்ளதா என்பதோடு இல்லாமல்,

(ii) சிவில் எஞ்சினீயரிடம் காண்பித்து பில்டிங் சரியாக கட்டப் பட்டிருக்கிறதா என்றும் பார்ப்பது நல்லது.

இந்த இரண்டு வேலைக்கும் வாட்டர் வயலட்.

பள்ளியில் சொல்லிக் கொடுக்கும் பாடங்களை அப்படியே படித்து பாஸ் செய்து வேலைக்கு போகிறான்—பீச்

பள்ளிப்படிப்பு மட்டுமில்லாது அந்த subject சம்மந்தமாக பத்திரிக்கைகள் படிப்பதோடு லைப்ரரியில் அது சம்மந்தமான புத்தகங்கள் படித்து அறிவை விருத்தி செய்து கொள்கிறான்—ஸெராட்டோ

தானே ஒரு subject (psychology, sociology) போல் உருவாக்குகிறான் — Water Violet

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றாள் தொழாஅ ரெனின்

என்று ஆன்மிக ஞானி ஆகிறான்—அக்ரிமனி.

---

அக்ரிமனி பற்றி மிகச் சரியாகவும் தெளிவாகவும் புரிந்து கொள்ள இம்மருந்தை 'பீச்' என்ற மருந்துடன் ஒப்பிட்டு படித்தால் போதும்.

பீச் டைப் நபரும் அக்ரிமனி போல் short and curt ஆகவும் near telegraphic lanugage-ல் பேசுகிறான். ஆனால் இவ்விரண்டு மருந்துகளுக்கிடையே உள்ள ஒரு பெரிய விஷயம் தரம் (quality) அல்லது செயல் (action) பற்றியது. நீதிபதிகளை மேலெழுந்தவாரியாக பார்க்கும் போது அவர்களை 'பீச்' டைப் என்று சொல்வோம். அதாவது ஒருவர் செய்த செயல், கேட்கும் நியாயம் அல்லது புரிந்த தவறு சட்டப்படி சரியா, தப்பா என்று சொல்வதே நீதிபதியின் வேலை என்று சொல்லத் தோன்றும். ஆனால் உண்மை என்னவெனில் இரு தரப்பினரையும் திருப்தி செய்யும்படி தீர்ப்பு சொல்வதே ஒருவரை நல்ல நீதிபதியாக ஆக்கும். Elegant என்ற வார்த்தை இவருக்கு பொருந்தும். Elegant என்றால் beauty of bearing, grace, refinement, சிறப்பு, நேர்த்தி, அழகு, கம்பீரம்; pleasing to good taste (in behaviour, dress etc.) மனதிற்குகந்த, நேர்த்தியான, அழகான, எடுப்பான.

grace = attractive feature.

ஒரு சட்டமன்ற உறுப்பினர் ஒருவரை தாறுமாறாக திட்டி விட்டார். பின்னவர் அந்த உறுப்பினர் மீது கோர்ட்டில் அவதூறு வழக்கு தொடர்ந்தார்.

சாதாரண நீதிபதியாக இருந்தால் (சாதாரண என்றால் சிறிதளவும் அக்ரிமனி பாசிடிவ் தன்மை இல்லாதவர் என்று இங்கு அர்த்தம் கொள்ளவும்) குற்றவாளிக்கு ஆயிரம், இரண்டாயிரம் ரூபாய் அபராதமாக

விதித்திருப்பார். இது அந்த சட்டமன்ற உறுப்பினருக்கு (தண்டனை கிடைத்ததால்) disgrace (அவமானம், அகவுரவம், அவமதிப்பு) ஆகிறது.

ஆனால் நமது (சிறிது பாசிடிவ் அக்ரிமனி தன்மையாளராக உள்ள) நீதிபதி (சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி கற்பகவிநாயகம்) தீர்ப்பை பாருங்கள்:

"மனிதர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு சட்டமன்ற உறுப்பினராக உள்ள இவர் வாழ்வில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று தெரிந்து கொள்ள காந்தி ஆசிரமத்தில் ஒரு மாதம் தங்கி, மகாத்மா காந்தி எழுதிய சத்திய சோதனை என்ற புத்தகத்தை படித்து பிறகு இதை சரியாக படித்து தெரிந்து கொண்டாரா என்று ஒரு ஆசிரியரிடம் இண்டர்வ்யூக்கு செல்ல வேண்டும்".

இந்த தீர்ப்பில் எவ்வளவு கம்பீரம், அழகு, நேர்த்தி உள்ளது பாருங்கள். அந்த சட்டமன்ற உறுப்பினரும் அவமானமாக கருதியிருக்க மாட்டார்.

தண்டனை கொடுப்பதை விட நல்வழி காண்பிப்பதுதானே சிறந்தது.

---

(A) சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி எம். கற்பக விநாயகம் என்பவர் ஒரு பாசிடிவ் அக்ரிமனி-டைப் நபர்தான். இதை எப்படி சொல்கிறோம் எனில் அவர் பேச்சிலிருந்து வாசகர்கள் தெரிந்து கொள்ளலாம். நாகர்கோவிலில் சட்ட உதவி மையத்திற்கான அடிக்கல் நாட்டு விழாவில் 26-2-2004 அன்று அவர் பேசியதாவது: "தனக்கு கீழே உள்ளவர்களையும் தனக்கு இணையாக மேம்படுத்துவதற்கு கை தூக்கி விடுவோரே உயர்ந்தவர்கள். சரிநிகர் சமானமாக அன்புடன் அரவணைத்து பிறரையும் வாழ்வில் உயரச் செய்வோரே மிகவும் உயர்ந்தோராவர்". (நன்றி - தினமணி) (இவரது தீர்ப்புகளைப் படித்தாலும் இவர் ஒரு பாசிடிவ் அக்ரிமனி டைப் என்றே நமக்கு சொல்லத் தோன்றும். (உதாரணத்திற்கு அவரது தீர்ப்பு ஒன்று பற்றி முன் பக்கத்தில் குறிப்பிட்டுள்ளோம்.)

வங்கியில் பணமில்லாமல் காசோலை (Cheque) கொடுத்து மோசடி செய்த வழக்கில் நடிகை ரோஜாவிற்கு (2003-ம் வருடம்) இதே நீதிபதி கற்பக விநாயகம் ஜெயில் தண்டனை ஏதும் கொடுக்காமல் ஒருநாள் பூராவும் அனாதை குழந்தைகள் ஆசிரமத்தில் அவர்களுக்கு சேவை செய்ய வேண்டும் என்று தீர்ப்பளித்தார்.

அக்ரிமனி, வாட்டர் வயலட் ஆகிய இரு மருந்துகளுக்கிடையே வித்தியாசம் தெரிந்து பிரித்து படிப்பது கஷ்டம் என்று முன்பு ஓரிடத்தில் எழுதியிருந்தோம். வாட்டர் வயலட் நபர்களுக்கு மற்றவர்கள் வழி விடுகின்றனர். அக்ரிமனி நபருக்கு மற்றவர்கள் சௌகர்யங்கள் செய்து கொடுக்கின்றனர். அக்ரிமனி நபர்களுக்கு மற்றவர்கள் அடிபணிந்து வேலை செய்கின்றனர் என்பதற்கு ஒரு உதாரணமாக, வருமான வரி கட்டும் நபருக்கு, ரிமாண்ட் (போலீஸ் விசாரணை) கைதிகளுக்கு ஜெயிலில் 'ஏ' வகுப்பு (மின் விசிறி, கட்டில், வீட்டிலிருந்து சாப்பாடு போன்ற) சௌகர்யங்கள் உண்டு என்பதை சொல்லலாம்.

(B) *சீனதேச* ஈ-சிங் என்ற சாஸ்திர நூல் அக்ரிமனி/வாட்டர் வயலட் டைக்கு ஒப்பிடலாம். இஃது எப்படியெனில் உனக்கு ஏதாவது ஒரு விஷயத்தில் தீர்வு/சரியான பதில் கிடைக்கவில்லை எனில் ஈ-சிங் என்ற சாஸ்திர நூலை கலந்தாலோசிக்க நம்பர் ஒன் தீர்வு பதில் கிடைக்கும். காந்த சிகிச்சை உண்மையிலேயே பலன் உடையதா என்று ஈ-சிங் புத்தகத்தில் பார்த்தோம். (இந்திய ஜோஸ்ய முறை போல் 'ஆம்' அல்லது 'இல்லை' என்று சொல்லாமல்) விவரமான பதில் கிடைத்தது. "ஒருவன் தனது வேலைக்காரியை எவருக்கும் கடனுகை கொடுக்கமாட்டான்." (இதற்கு அர்த்தம் என்னவெனில் ஒரு நபர் உபயோகித்த காந்தத்தை மற்றொருவர் உபயோகிக்கக் கூடாது). வலி, நோய் தீர உன் உடல் மீது வைக்கும் காந்தத்தை இரு பித்தளை தகடுகளுக்கு இடையில் வைத்து உபயோகம் செய். (முன் கூட்டிய ஒரு தினத்திற்கு உனக்கு தண்ணீர், சாப்பாடு ரெடி செய்து விட்டு) காந்த சிகிச்சை செய்து கொண்ட பின்பு வேறு மனிதர்களுக்கு மத்தியில்/அருகில் இல்லாமல் ஒரு தினம் பூராவும் தனிமையில் இரு."

<u>வாட்டர் வயலட் - அனுபவ கேசுகள்</u>: திரு. திருநாவுக்கரசு, டிவிஷனல் இஞ்சினியர், தமிழ்நாடு மின்வாரியம், சென்னை-2 சொல்கிறார்:

"எனது மருமகள் லாரி விபத்தில் அடிபட்டு கோவை ஆசுபத்திரியில் சேர்த்த செய்தி கேட்டு நான் அங்கு விரைந்து சென்று நோயாளிக்கு தினம் 2-3 வேளை வாட்டர் வயலட் என்ற மலர் மருந்தும் அவளது பெற்றோர், உறவினர்களுக்கு ரெட்செஸ்ட்நட் கொடுக்க ஆரம்பித்தேன். கோவை மெடிகல் ஸெண்டரில் வைத்திய முறைகள் சரியில்லை என்று உணர்ந்து நோயாளியை கங்கா ஹாஸ்பிடலுக்கு மாற்றினோம். இரண்டு எலும்பு முறிவு ஸ்பெஷலிஸ்ட்கள் விரைந்து வந்து பம்பரம் போல் செயல்பட்டு ஆப்ரேஷன் செய்து அடுத்த இரு தினம் கழித்து பிளாஸ்டிக் சர்ஜன்கள்

வந்து காயங்களுக்கு ஆபரேஷன் செய்து மிக வேகமாக அவளது ஆரோக்கியம் முன்னேறியது.

இந்நிலையில் சாதாரணமாக 1-2 மாதம் ஆசுபத்திரியில் இருக்க வேண்டிய நோயாளி விரைவாக குணம் அடைந்தாள். வாட்டர் வயலட் miracle போல் வேலை செய்தது.

பாட்ச் மருந்துகள் உபயோகித்து வரும் திரு. வைரவன் (புதிய எண். 64, முதல் குறுக்குத் தெரு, கிழக்கு சி.ஐ.டி. நகர், நந்தனம், சென்னை-600 035, தொலைபேசி: 2432 8970) அவர்கள் சொல்கிறார்.

10.2.2004 அன்று எனது தம்பி மனைவியின் தங்கை பெயர் உமையாள் (வயது 35) ஆறு மாதமாக கழுத்து வலி, அசிரத்தையாக இருந்து கண் பார்வை மங்க ஆரம்பிக்கவே டாக்டரிடம் காண்பிக்கச் சென்றனர். இத்தருணத்தில் தான் நான் நோயாளிக்கு தினம் 2-3 வேளை வாட்டர் வயலட் மற்றும் பெற்றோர்களுக்கு ரெட் செஸ்ட்நட் சாப்பிடச் செய்தேன்.

ஸ்கேன் செய்து பார்த்ததில் மூளையில் கட்டி இருப்பது தெரியவந்து இவரது தூரத்து உறவினர் ஒருவர் அடையார் V.H.S.ல் சேர்க்கச் சொல்ல (அங்கு செட்டியார் இனத்தவர் மற்றும் ஏழை எளியவர் அனைவருக்கும் இலவசம் என்றாலும் அங்கு யாரையும் நோயாளியின் உறவினருக்குத் தெரியாது). 12.2.2004 அன்று கேட்டவுடன் கடகடவென்று அட்மிஷன் கொடுத்து கேஸ் சீட்டில் 'இலவசம்' என்றும் 13.2.2004 காலையில் ஆபரேஷன். ஐந்து டாக்டர்கள் சேர்ந்து தங்களுக்கு ஃபீஸ் வேண்டாம் என்று சொல்லி மூன்று அறுவை சிகிச்சை செய்து நான்கு கட்டிகளை எடுத்தனர். தியேட்டர் செலவு, மருந்து செலவு என இருபதனாயிரம் ரூபாய் மட்டுமே செலவு செய்து 25.2.2004 அன்று நல்ல நிலையில் வீடு திரும்பி விட்டார். வாட்டர் வயலட், ரெட் செஸ்ட்நட் சாப்பிடவில்லையெனில் இக்கேஸில் சாதாரணமாக 2-3 இலட்சம் வரை செலவு ஆவதோடு மட்டுமில்லாது மூளையில் அறுவை சிகிச்சைக்குப் பின் நோயாளி சகஜ நிலைக்குத் திரும்ப பல மாதங்கள் வரை நிச்சயமாக ஆகி இருக்கும்.

வாசகர்களே! ஞாபகமிருக்கட்டும். உங்கள் குடும்பத்தில் எவராவது நோய்வாய்ப்பட்டு அல்லது விபத்துக்குள்ளாகி ஆசுபத்திரியில் இருக்கும் போது அந்த நபருக்கு தினம் 2-3 வேளை வாட்டர் வயலட் சாப்பிட்டு வந்தால், கவர்னர், மந்திரி போன்றோர்களை டாக்டர்கள் எப்படி கவனிப்பார்களோ அப்படி வேகமாக எல்லா முன்னேற்பாடு, எச்சரிக்கையுடன் நிறைய டாக்டர்கள் பம்பரம் போல் சுழன்று

செயல்படுவர். அதே சமயத்தில் நோயாளியின் உறவினர்கள் ரெட் செஸ்ட்நட் சாப்பிட பலன் 3-5 மடங்கு அதிகரிக்கும்.

---

(A) சாதாரண நேரங்களில் உன் விரல் அசைவிற்கேற்ப மற்றவர்கள் ஓடியாடி பம்பரம் போல சுழன்று உனக்கு உதவி/ வேலை செய்ய நீ கார்ஸ் மற்றும் இம்பேஷன்ஸ் சாப்பிட்டு வா.

(B) நீ நோய்வாய்ப்பட்டு அல்லது விபத்தில் மாட்டிக் கொண்டு ஆசுபத்திரியில் இருக்கும் போது வாட்டர் வயலட் சாப்பிட்டு வர, உன் விரலை நீ அசைக்காமல் கூட டாக்டர், நர்ஸ் பம்பரம் போல் சுழன்று ஒரு முதல்வர் அல்லது கவர்னரை கவனிப்பது போல் உனக்கு விரைந்து நன்ருக சிகிச்சை செய்வர்.

கவலையை மறக்க குடிக்கிருன் — அக்ரிமனி

கையில் காசு கிடைத்தால் (மட்டுமே) உடனடியாக குடிக்கப் போகிருன் — வைல்டு ரோஸ்

Sound Horn [ஒலி எழுப்புக] என்று பஸ், லாரி பின்ஞல் எழுதப்பட்டுள்ளது. — ஹார்ன்பீம்

No Horn என்று பள்ளி, கல்லூரி உள்ள ரோடில் போர்டு வைத்துள்ளனர் - இம்பேஷன்ஸ்

வாசக சாலையில் 'அமைதி காக்க' என்று எழுதி வைத்துள்ளனர் — இம்பேஷன்ஸ்.

Higher Uses — மேல்நிலை உபயோகங்கள்:

மலர் மருந்துகளை நீங்கள் சாப்பிடப் போகிறீர்களோ இல்லையோ, அல்லது எவருக்காவது கொடுத்து அவரைக் குணப்படுத்துவீர்களோ இல்லையோ, ஆயினும் மலர் மருத்துவம் பற்றி தெரிந்து கொள்வதால் ஒரு மனிதரைப் பார்த்தவுடன் ('பார்த்தவுடன்' என்ருல் 'அவரது பேச்சு, நடவடிக்கை, செயல் ஆகியவை உற்று கவனித்தவுடன்' அல்லது 'மற்றவர்கள் அவரைப் பற்றி சொல்வது'என்று அர்த்தம்) அவர் முப்பத்தெட்டு மலர் மருந்துகளில் எந்த மருந்தின் தன்மையாளர் என்று சொல்ல முடியும். இப்படி பல மனிதர்களைப் பற்றி (அவர் எந்த மருந்தின் 'டைப்' என்று) தெரிந்து கொள்வதால் அவரிடம் நாம் என்ன கேட்க வேண்டும் அல்லது பலன் எதிர்பார்க்கலாம் என்று தெரிந்து கொள்வது நமக்கு இலட்ச ரூபாய் பெறுமானம் உள்ளதாக ஆகிறது.

உதாரணமாக சமையல்காரியாக கிராப் ஆப்பிள் டைப் நபரை போட்டால் சுத்தம் (hygiene) பற்றி கவலையேயில்லாமல் இருக்கலாம். இதே போல் ஸெண்ட்டாரி நபரை வேலைக்காரராக வைத்திருப்பதால் நமக்கு அவனால் எந்த பிரச்சினையும் வராது.

வாட்டர் வயலட் டைப் பற்றி நாம் சென்ற மாத பாடத்தில் விலாவாரியாக படித்து விட்டதால், இந்த டைப் நபர் நமக்கு கிடைத்தால் அவர் மூலமாக நாம் என்ன நல்ல பலன் ('அதிசயிக்கத்தக்க விதத்தில்' என்று வேண்டுமானாலும் சொல்லலாம்) பெறலாம் என இப்போது பார்ப்போம்.

வாட்டர் வயலட் என்பது ஸெராட்டோவிற்கு அண்ணன் என்று பார்த்தோம். வாட்டர் வயலட்டிற்கு அண்ணன் அக்ரிமனி.

நீ வசிக்கும் தெரு வெள்ளத்தில் மூழ்கிக் கொண்டிருக்கும் போது உன்னை (மற்றும் உன் தெருவாசிகளை) காப்பாற்றுவதோடு மட்டுமில்லாமல், வெள்ளம் போன்ற நிலைமைகளில்லாத மற்ற சாதாரண நாட்களில், மற்றவர்களால் செய்ய முடியாத, செய்ய பயப்படும் வேலைகளான கடலில் மூழ்கி இலட்ச ரூபாய் மதிப்புள்ள நல்முத்து எடுத்து உனக்கு கொண்டு வந்து (நீ கேட்காமலேயே) கொடுத்து விட்டு (பிரதி பலன் ஏதும் எதிர்பார்க்காமல்) செல்வான் வாட்டர் வயலட் டைப். He is all in all. (Wild Oat அல்ல!) [ஆனால் ராக்ரோஸ் டைப் நபர் நீ நீரில் மூழ்கினால்தான் உனக்கு உதவ முன் வருவான்.]

இலட்ச ரூபாய் மதிப்புள்ள முத்து உனக்கு கொடுப்பான் என்று சொன்னால் "முத்தான விஷயங்கள் உனக்கு தெரிவிப்பதால் இவற்றை உன் வாழ்க்கையில் பின்பற்றி பிற்காலத்தில் இலட்ச ரூபாய் தேவைப்படும் மாற்று சிறுநீரகம் பொருத்தும் அறுவை சிகிச்சை போன்ற வியாதிகளை வராமல் செய்வான்" என்று நீ அர்த்தம் செய்து கொள்ள வேண்டும். அவன் சொல்லும் முத்தான விஷயங்களில் சில பகுதிகளை கீழே கொடுத்துள்ளோம்

(1) மிக மேதாவி என்று நீ உன்னை நினைத்துக் கொண்டு தினம் தினம் படிக்கும் ஹிந்து பத்திரிக்கையில் அரைப்பக்கம் நீ தினம் சாப்பிடும் பெரிய வெங்காயத்தின் பயங்கர பின் விளைவுகள் பற்றி எழுதப்பட்டிருந்தது. வேறு ஒரு தேதியில் இதேபோல் அரைப்பக்கத்திற்கு (நீ தினம் வாங்கி சாப்பிடும்) பெங்களூர் தக்காளியின் பயங்கர பின் விளைவுகள் கான்சர் நோய் போன்றவை விவரிக்கப்பட்டிருந்தது.

எல்லோரும் tubelight உபயோகிக்கிறோம். பாலிதீன் பாக்கெட்டில் வாங்கி அடைக்கப்பட்ட பால் மற்றும் உணவுப்பொருட்கள் வாங்கி சாப்பிடுகிறோம். சிப்ஸ் கடைகள் புற்றீசல் போல் பெருகி விட்டன. All fried things and packed items are carcinogenic என்று நாம் சொல்லவில்லை. நீ தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடும் மேலை நாட்டு விஞ்ஞானிகள் சொல்கின்றனர். ஆகையால் (விதி விலக்கே இல்லாமல்) பத்து வருடம் கழித்து கான்சர் ஆசுபத்திரியில் அட்மிட் ஆக இன்றே நமது பெயரை பதிவு செய்து கொண்டு விட்டவனாக ஆகிவிடுகிறோம்.

நாம் எல்லோரும் தினம் தினம் பெங்களூர் தக்காளி, பெரிய வெங்காயம் சாப்பிடுகிறோம். இன்றே தனது பெயரை மாற்று சிறுநீரகம் பொருத்த வேண்டிய ஆஸ்பிடலில் பதிவு செய்து கொண்டு விட்டவர்களாக ஆகி விடுகிறோம்.

பத்திரிகையாளன் (journalist) என்பவன் 70-90% மார்க் வாங்கிய வாட்டர் வயலட் டைப் நபர்.

முஷாரப் மற்றும், வாஜ்பாயி போட்டோக்களையே மாற்றி மாற்றி பிரசுரித்தே வயிறு கழுவும் இன்றைய பத்திரிக்கையாளர்களைப் பற்றி நான் சொல்லவில்லை. முஷாரப், வாஜ்பாயி சொல்வதை கேட்டு அதை அப்படியே எழுதும் ப்யூன்கள் இந்த பத்திரிகையாளர்கள்.

<u>வெங்காயம் பற்றி ஓர் குறிப்பு</u>: பதினைந்து ரூபாய் கொடுத்து அரிசி வாங்கி சாப்பிடக்கூட முடியாத பரம ஏழைகள் தான் மிகவும் மலிவாக கிடைக்கக்கூடிய வெங்காயத்தை சாப்பிடுவர். இது மலிவு. வயிற்றுப் பசியை அமுக்கி விடும். அரிசி வாங்கி சாப்பிட வழியில்லாதவர்கள்தான் வயிறை கெடுக்கக்கூடிய வெங்காயம் வாங்கி சாப்பிடுவர். வெங்காயம், பூண்டு மற்றும் உரிக்க உரிக்க ஒன்றுமேயில்லாமல் போகக்கூடிய முட்டைக்கோஸ் போன்றவை மனிதர்கள் சாப்பிடக்கூடாத ஒன்று. இதேபோல் நீளவாட்டில் உள்ள கொத்தவரங்காய், பீன்ஸ் சாப்பிடவே கூடாது. (அவரை, புடலை விதிவிலக்கு)

இதைவிட முக்கியமாக தென்னிந்தியர்கள் (குறிப்பாக தமிழ்நாட்டவர்கள்) தெரிந்து கொள்ள வேண்டியது என்னவெனில் ஹோட்டலில் வட இந்திய உணவு சாப்பிடுகிறோம். இது ஏன் பெரிய தவறு எனில் வடக்கத்தியர்கள் சுக்ல பக்ஷ (யஜுர் வேத)த்தை சேர்ந்தவர்கள். நாம் கிருஷ்ண பக்ஷத்தை சேர்ந்தவர்கள். அவர்களுக்கும் நமக்கும் எல்லாம் நேர் எதிர் அல்லது தலைகீழ்தான். வடக்கத்தியர்கள் ஆரோக்கியமாக இருக்கும் போது வெங்காயம் சாப்பிடுவர். எலுமிச்சம் பழம் தள்ளுபடி.

வியாதியாக இருக்கும் போது எலுமிச்சம் பழம் சாப்பிடுவர். வெங்காயம் தள்ளுபடி.

இதுவே தென்னிந்தியாவில் நாம் வியாதியாக இருக்கும் போது மட்டும் வெங்காயம் சாப்பிடலாம். எலுமிச்சை கூடாது. ஆரோக்கிய நிலையில் எலுமிச்சம்பழம் சாப்பிடலாம். வெங்காயம் கூடாது. ஆகையால் அவர்கள் செய்வதை நாம் பின்பற்றுவது அதிக வியாதிகளை உண்டு பண்ணும்.

கடுகு எண்ணை நமக்கு சூடு. அதில் கறிகாய் வதக்கி சாப்பிட்டால் அன்று பூராவும் கண் தெரியாது.

ஆனால் வடக்கத்தியர்களுக்கு அது ஒத்துக்கொள்ளும். குளிர்ச்சி.

நல்லெண்ணை தேய்த்து நாம் குளிக்க உடல் சூடு குறையும். வடக்கத்தியர் நல்லெண்ணை உபயோகித்தால் சூடு அதிகமாகி விடும்.

மேற்சொன்னவற்றை தினசரி வாழ்க்கையில் கடைபிடித்தால் நாம் 75 சதவிகித மருத்துவ செலவை குறைக்கலாம்.

நெல்லிக்காயை ஆவியில் வேக வைத்து ஜீரா (சர்க்கரைப்பாகில் போட்டு வைத்து) சாப்பாட்டிற்கு முன்பு சாப்பிடு. சாப்பிட்ட பிறகு இலந்தைபழம் சாப்பிடு. நாட்டு மருந்துக்கடையில் இலந்த வடை கிடைக்கிறது. விளாம்பழம் எப்போது வேண்டுமானாலும் சாப்பிடு. வாழைப்பழம் ஒருபோதும் தொடாதே.

---

உனக்கு இலட்ச ரூபாய் மதிப்புள்ள விஷயங்கள்

10-20 வருடங்கள் கழித்து ஒவ்வொரு நூறு ஆசுபத்திரிகளிலும் 30 ஆசுபத்திரிகள் கான்சர் ஹாஸ்பிடல்களாகவும், 30 ஆசுபத்திரிகள் brain tumour ஹாஸ்பிடல்களாகவும் 30 சிறுநீரகம் மாற்று சிறுநீரகம் பொறுத்த அறுவை சிகிச்சை ஹாஸ்பிடல்களாகவும் இருக்கும். இவற்றில் நாம் இன்றே நமது பெயரை பதிவு செய்து கொண்டு விட்டாய் எனில் அது மிகையாகாது. எப்படியெனில்

அநேகமாக எல்லார் வீட்டிலும் கம்ப்யூட்டர், இண்டர்நெட் வந்து விட்டன. இவை வீட்டில் இல்லாதவர்கள் பிரௌஸிங் ஸென்டர் போய் உபயோகப்படுத்துகின்றனர். அரையணா சம்பளம் வாங்கும் பயல்கள் கூட ஸெல்போன் உபயோகிக்கிறான். இவர்கள் இன்றே தனது பெயரை

மூளைக்கட்டி (brain tumour) ஹாஸ்பிடலில் பதிவு செய்து கொண்டு விட்டவர்களாக ஆகி விடுகின்றனர்.

---

ஸெராட்டோ நபர் நமது (வாழ்க்கைப்) பிரச்சினைகளை நீக்கும் நாற்பது சதவிகித மார்க் வாங்கிய நபர் எனில் வாட்டர் வயலட் 90 மார்க் வாங்கியவன். அக்ரிமனி 100 சதவிகித மார்க் வாங்கியவன் எனலாம்.

ஆகையால் வாட்டர் வயலட்டிற்கும் அக்ரிமனிக்கும் இடையே பெரிய வித்தியாசமில்லை. இதை எதற்கு சொல்கிறோம் எனில் பல இடங்களில் இவ்விரண்டு மருந்துகளைப் பற்றி நாம் எழுதும் போது ஒரு மருந்து இன்னொன்று போல் தோற்றமளிக்கும்.

(1) அக்ரிமனி நபரால் உனக்கு எந்த பலனும் இல்லை. ஏனெனில் நீ அவன் காலடியில் பணத்தைக் கொண்டு போய் கொட்டுவாய். அவன் நமக்கு தேவையில்லை. நீ அக்ரிமனி டைப் ஆக இல்லாதபட்சத்தில் அக்ரிமனி பாசிடிவ் தன்மைகளை பின்பற்றலாம். இது உன்னால் செய்ய முடியாமல் போகலாம். ஆகையால் விலையுயர்ந்த (தங்கத்தை விட 140 பங்கு விலையுள்ள) முத்து உனக்கு கிடைக்காமல் போகலாம். இதற்கு பதிலாக தங்கச்சுரங்கம் கிடைத்தாலும் கிட்டத்தட்ட பெரிய வித்தியாசம் இல்லை அல்லவா?

(2) ஆகையால் வாட்டர் வயலட் நபரிடம் நீ என்ன எதிர்பார்த்து பெறலாம் என பார்ப்போம்.

(a) ரெட் செஸ்ட்நட்-க்கு வாட்டர் வயலட் பாஸ் போன்றவன். ஸெராட்டோ என்பது என்ஸைக்ளோபீடியா. வாட்டர் வயலட் Encyclopaedia of objective meaning.

ஸெராட்டோ என்பவன் walking encyclopaedia எனில் அதை விட வாட்டர் வயலட் உயர்ந்ததல்லவா?

வாட்டர் வயலட் நபரிடம் தங்கமயமான விஷயங்கள் என்னவெனில்,

ஒரு வேளை அவனுக்கு ஜோஸ்யம் தெரியுமெனில் நீ மனதில் கொள்ள வேண்டியது என்னவெனில் இவனை விட ஜோஸ்யம் தெரிந்தவன் வேறு ஒருவன் (இன்னொரு வாட்டர் வயலட் தவிர) இருக்க முடியாது. ஆகையால் நீ இவனிடம் ஜோஸ்யம் கற்று, எல்லோருக்கும் ஜோஸ்யம் பார்க்காவிட்டாலும் கூட, உன் ஜாதகத்தை பார்த்து (மற்ற எந்த ஜோஸ்யரை விட) அதை analyze செய்து, ஜாதகத்திற்கேற்ப உன் வாழ்க்கை முறைகளை

மாற்றிக் கொள்வதால் நீ விரைவில் தங்கச்சுரங்கத்திற்கு அதிபதியாக முடியும்.

வாட்டர் வயலட் நபர் தோற்றத்தில் ஒன்றுமில்லாதவன், ஒன்றும் தெரியாதவன் போல் காணப்படுவான். இவனுக்கு நீ (advice) அறிவுரை சொல்வதோ, சாமர்த்தியமாக மடக்கவோ, ஏமாற்றவோ முற்படாதே. இதுதவிர, மிக முக்கியமாக அவனே ஏன் இன்றும் தங்கச்சுரங்கத்திற்கு அதிபதியாகவில்லை என்று கேட்காதே. ஏனெனில் வாட்டர் வயலட் ஒரு பரோபகாரி.

வைல்டு ரோஸ் டைப் நபர் ஏனோதானோ என்றுதான் டிரஸ் அணிந்து கொண்டிருப்பான். தான் ஒரு நல்ல விலையுயர்ந்த கடியாரம் வாங்கி அணிவதை விட அப்படி ஒரு வாட்ச் எவருக்காவது வாங்கிக் கொடுத்து அணியச் செய்வதில் தான் அவன் மனம் திருப்தியடைகிறது.

வாட்டர் வயலட்-லும் இதே விஷயம் தான் தோற்றத்திலும், செயலிலும்.

ஒரு முக்கிய விஷயம் என்னவெனில், சாப்பிட உனக்கு ஒரு மீன் ஸெராட்டோ உனக்கு கொடுக்கிறான். வைல்டு ரோஸ் தினம் மீன் பிடிக்க தூண்டில் வாங்கிக் கொடுக்கிறான். ஆனால் வாட்டர் வயலட் என்பவன் உனக்கு 'மீன் பிடிக்க' கற்றுக் கொடுக்கிறான். எது உசத்தி என்று பார்.

ஏதாவது ஒரு கலையில், பாடத்தில் எவருக்கும் தெரியாத அரிய மிக உயர்ந்த விஷயங்கள் உனக்கு தெரிந்திருந்தால் நீ மன்னாதி மன்னன்தானே!

செய்வதற்கு (மற்றவர்களின் பாவங்களை வாங்கி சாப்பிட்டு பஸ்மம் ஆக்க) எதற்கு மேல் ஒன்றுமில்லையோ, அந்த நல்ல காரியமான உண்ணாவிரதம் இருக்கிறான் ராக் வாட்டர்.

வாட்டர் வயலட் நபர் உலகியல் விஷயங்களில் செய்வதற்கு/ சொல்வதற்கு எதற்கு மேல் ஒன்றுமில்லையோ அதைப்பற்றிதான் சொல்வான்/செய்வான்.

வாட்டர் வயலட் நபரிடம் சந்தேகம் கேள்.

இவன் சொல்வது வேத வாக்கியம்தான். எதற்கு மேல் நல்லது ஒன்று இல்லையோ அதை வேத வாக்கியம் என்பர். வேதத்தைப் படித்து புரிந்து கொள்ள நமது வாழ்நாள் போதாது அல்லது பலரால் முடியாது என்பதால் தான் வாட்டர் வயலட் நபர்களை இயற்கை நம்மிடையே அனுப்பி வைத்துக் கொண்டிருக்கிறது.

ஞாபகமிருக்கட்டும். இவன் சொல்வது/செய்வதில் ஒரு சதவிகிதம் கூட தவறு வராது. இவனை நீ குருவாக ஏற்றுக் கொள்ளலாம்.

(A) ஒரு சப்ஜெக்ட் கற்றுக் கொள்ள - செஸ்ட்நட்பட்
(உபகுரு என்று சொல்லலாம்)

(B) மந்திர உபதேசம், தீட்சை கொடுக்க - ஸ்வீட்செஸ்ட்நட்

(C) உலகில் இருப்பதிலேயே மிக நல்ல விஷயங்களை நீ கற்க - வாட்டர் வயலட்

வாட்டர் வயலட் என்ற மலர் மருந்து ஸ்வீட்செஸ்ட் என்ற மருந்தின் தம்பி என்று ஏன் சொல்கிறோம் எனில், மோட்சம் பெற உனக்கு குரு உபதேசம் கிடைக்காவிட்டாலும் கூட, அதற்கு மாற்றாக வேறு வழிகளை வாட்டர் வயலட் நபர் உனக்கு காண்பிப்பான். (உபதேசம் கொடுப்பான் என்று நாம் எழுதவில்லை என்பதை வாசகர்கள் கவனிக்கவும்)

வாட்டர் வயலட் நபருக்கு நீங்கள் 'ஜே!' போடலாம்.

வாட்டர் வயலட் என்பது வாகன நெரிசல் (traffic) நிறைந்த சாலையில் ஆம்புலன்ஸ் அல்லது தீயணைப்பு வண்டி விரைந்து செல்வது போல் என்பதை மனதில் வைத்துக் கொள்ள வேண்டும். எல்லோரும் இவனுக்கு ஒதுங்கி வழிவிடுவர். One-way-ல் எதிர்புறமாக போகலாம். அவனை எதிர்த்து எவரும் பேச முடியாது. ஏனெனில் அவன் தவறு செய்வதில்லை. திட்டம் ஏதுமில்லாமல் கன்னாபின்னாவென்று ஏதாவது உளறினால் அல்லது செய்தாலும் கூட அது நல்ல விதத்தில் முடியும். ஏனெனில் அவன் கடவுளின் தூதன்.

தூதனாக வந்தவனை அவமதிக்கக்கூடாது என்பது தர்மம். ஆகையால் இவனை நீ வம்புக்கு இழுத்தால் உனக்குத்தான் நஷ்டம். அவனுக்கல்ல.

வைல்டு ரோஸ் உனது குறிப்பிட்ட ஒரு சாதாரண பிரச்சினையை தீர்ப்பான். வாட்டர் வயலட் வாழ்க்கையில் அரிய விஷயங்களை சொல்வான்.

செயற்கரிய செய்வார் பெரியர்.

---

(A) 'FIXED PRICE' என்ற போர்டு சில கடைகளில் பார்த்திருப்பாய். அந்த கடை உரிமையாளர் பீச்-டைப் நபர் என தெரிந்துகொள்.

(B) 'NO BARGAIN' என்ற போர்டு இருந்தால் அக்கடையின் உரிமையாளர் அக்ரிமனி-டைப் என தெரிந்து கொள்.

(C) 'BARGAIN SALE' என்று இருந்தால் அக்கடையில் நுழையாதே. அவன் சிக்கரி டைப் நபர். வேறு கடைகளில் இருபத்தி ஐந்து ரூபாய்க்கு கிடைக்கக் கூடிய பொருளை நூற்றைம்பது என போட்டு நீ ஐம்பதுக்கு கேட்டால் கூட கொடுப்பான். ஆனால் உனக்குத்தான் இருபத்திஐந்து ரூபாய் நஷ்டம்.

---

அக்ரிமனி என்பது ஸென்ஸார் போர்டு மாதிரி. ஸென்ஸார் போர்டு மற்றும் நீ வாங்கிக் கொடுத்து துணியில் சட்டை தைத்துக் கொடுக்கும் டெய்லர் ஆகிய இரண்டு விஷயங்களையும் மனதில் வைத்துக் கொண்டால் அக்ரிமனி சாப்பிட என்ன பலன் கிடைக்கும் என்று சுலபமாக நாம் தெரிந்து கொண்டு விடலாம்.

இரண்டு நபர்களும் தேவையில்லாதவற்றை வெட்டி எறிந்து விடுகின்றனர்.

நமக்கு எது தேவை, எது அனுவசியம் என்று தெரியாமல் எல்லாவற்றையும் நம் மீது போட்டுக் கொண்டு திண்டாடுகிறோம். தேவையில்லாத தொடர்புகள், நபர்கள், உணவு பழக்கங்கள் ஆகியவற்றை வெட்டி எரிந்து விடுவதால் நிம்மதியான வாழ்க்கை கிடைக்கிறது. இதனால் நிறைய ஓய்வு கிடைக்கிறது. டென்ஷன் வராது.

பரதநாட்டியம் பார்த்தாலும் அக்ரிமனி பாசிடிவ் தன்மைகளை நம்முள் வளர்க்கும். நாட்டியத்தில் பாவம் (மனோபாவம்) தான் முக்கியம் கை போகின்ற திக்கில் காலை கொண்டு செல்லவேண்டும். அந்த திக்கில் பார்வை போகும். பிறகு மனமும் அந்த திக்கில் செல்லும். மனம் (மனச்சாட்சி) நல்லதை மட்டுமே சொல்லும். 'நெகடிவ்' தன்மைகள் அதனிடம் கிடையாது.

வாட்டர் வயலட் மற்றும் அக்ரிமனி இடையே உள்ள வித்தியாசம் தெரிந்து கொள்வது எவருக்குமே சுலபமான வேலை அல்ல. இவ்விரண்டு மருந்துகளையும் தனித் தனியாக 2-5 வாரம் சாப்பிட்டு, கிடைக்கும் பலன்களை பட்டியல் போல் எழுதி ஒப்பிட்டு பார்க்க ஓரளவே புரியும். ஆயினும் மிக முக்கிய வித்தியாசம் என்னவென்று இப்போது புரிய வைக்கிறோம்.

உதாரணமாக வியாதிகளைப் பொறுத்தவரை:

(A) டாக்டர்களால் நிச்சயமாக சரிசெய்ய முடியும் எனில் (இதற்கு 2-3 இலட்சங்கள் ஆகும். ஆனால் உன்னிடம் அவ்வளவு பணமில்லை என்ற

நிலையில் அல்லது கிட்னி திருடும் டாக்டர்களிடம் ஏமாறாமல் இருக்க) வாட்டர் வயலட் சாப்பிட சரியான டாக்டர்கள் கிடைத்து மிக குறைந்த செலவில் உன்னை குணப்படுத்தி விடுவர்.

(B) எந்த டாக்டருக்கும் பிடிபடாத கேஸ்களும் உண்டு. இவற்றிற்கு அக்ரிமனி. உதாரணமாக hypochondlasis, ஹிஸ்டீரியா போன்றவை மருந்துக்கு அவ்வளவாக கேட்காது. ஆனால் ருத்ராட்சம் அணிந்து கொள்வதால், அல்லது ஸ்டான்லி ஆசுபத்திரி பக்கத்தில் உள்ள மசூதிக்கு சென்று (மயிலிறகால்) மந்திரித்து வர அல்லது சுதர்ஸன ஹோமம் போன்ற mystic வழிகளில்தான் உனக்கு குணம் கிடைக்கும் என்றிருக்கும் நிலைமைகளில் அக்ரிமனி சாப்பிடு.

(A) கண்களுக்கு தெரியக் கூடிய விஷயங்களுக்கு வாட்டர் வயலட் (டாக்டர்) கண்களால் பார்த்து செயற்கை கால் முட்டி வைத்தல் பைபாஸ் சர்ஜரி செய்கிறான்.

(B) ஊனக் கண்களால் பார்க்க முடியாத விஷயத்திற்கு (ஞானக் கண்ணால் செய்யப்பட வேண்டியவை) எனில் அக்ரிமனி.

உடனே சில வாசகர்கள் சாமர்த்தியமாக, 'நான் இரண்டு மருந்துகளையும் சேர்த்தே சாப்பிட்டுவிட்டால்...?' என்று கேட்கின்றனர். அதாவது தனது மூளையை உபயோகித்து tricks, அல்லது shortcut (குறுக்குவழி) தேடுகிறீர்கள்.

கவனமிருக்கட்டும், சாமர்த்தியம், tricks, shortcut ஆகியவை நெகடிவ் அக்ரிமனி தன்மைகளாகும்.

இவ்விரண்டு மருந்துகளையும் சேர்த்து சாப்பிடக்கூடாது. ஏனெனில் வாட்டர் வயலட் பொருள் (materialism) பற்றியது. அக்ரிமனி spiritualism (அருள்) பற்றியது. இரண்டும் ஒன்று சேராது. ஒன்று சேர்க்கமுடியாது. சேர்க்கவும் கூடாது.

உதாரணமாக யோகா என்பது நமது உடல் சக்தியை சேமித்து வைப்பது பற்றியது. (conserve energy).

உடற்பயிற்சி நிலையத்தில் (gym) செய்யும் exercise நமது சக்தியை வீணடிப்பவை (expending our energy)

இவ்விரண்டையும் சேர்த்தே செய்யக்கூடாது. ஸ்பிரிங் அறுந்த கதையாகிவிடும். சேர்த்து சாப்பிட்டால் என்ன நடக்கும் எனில் திருடன் உன் தெருவில் 28-ம் நம்பர் வீட்டில் திருடிய நகை பணத்துடன் உன்

வீட்டிலும் திருட வந்து, ஆனால் எங்கோ திருடியதை உன் வீட்டில் போட்டுவிட்டு ஓடிவிடுகிறான். சந்தோஷப்படாதே! அடுத்ததாக போலீஸ் உன் வீட்டிற்கு வந்து 28-ம் வீட்டில் திருடுபோன நகைகள் உன்னிடம் எப்படி வந்தது என்று துளைக்க ஆரம்பித்த கதையாகிவிடும். ஜாக்கிரதை!

நீ ஏன் உன் மூளையை உபயோகித்து சாமர்த்தியம், tricks, plans, குறுக்கு வழி என்று கஷ்டப்படுகிறாய். அதற்குத்தான் அக்ரிமனி இருக்கிறதே!

Nature hates our tricks. (இயற்கை உன் குறுக்கு வழிகள், சாமர்த்தியங்களை வெறுக்கிறது.)

Nature's ways are always short. (இயற்கை குறுக்கு வழியில் தான் வேலை செய்கிறது.)

Nature's ways cannot be improved upon. (கோடிக்கணக்கான வருடங்களாக இருக்கும்) இயற்கை வேலை செய்யும் வழிகளை இன்னும் நன்றாக (நூறு வருடங்களே வாழும்) மனிதனால் ஆக்க முடியாது.

*Nature constantly works toward perfection.*

மனிதன் தனது மூளையை உபயோகித்து எவ்வளவு சிறப்பாக செய்ய முடியுமோ அது போல் 10, 100, ஆயிரம் மடங்கு சிறப்பாக இயற்கை வேலைகளை செய்கிறது.

இயற்கை கொடுதத ஒரு மாங்கொட்டையை தோட்டத்தில் ஊன்றி தண்ணீர் சிறிது ஊற்ற ஒரு சில வருடங்களில், வருடா வருடம் ஆயிரக்கணக்காக மாம்பழங்கள். ஆனால் மனிதன் ஒரு ஃபாக்டரியில் பத்தாயிரம் மாம்பழம் உண்டாக்க Labour Welfare Officer, டைப் பிஸ்ட், வாட்ச் மேன், ஸ்ட்ரைக், போராட்டம் என கோடிக்கணக்கில் செலவழிக்கிறான். இதைவிட கேவலம் என்னவென்றால் இவனால் உண்டாக்கப்பட்ட (synthetic) மாம்பழத்தை சாப்பிட்டால் side-effects (பின்விளைவுகளை) பார்த்தால் அந்த மாம்பழம் வேண்டாம் என்று காத தூரம் ஓடி விடுவோம்.

ஒரு வங்கியில் உள்ள பாதுகாப்பு பெட்டகத்தில் 1200 லாக்கர்கள் உள்ளன எனில் அவை எல்லாவற்றையுமே திறக்கக் கூடிய ஒரு சாவி வங்கி மேலாளரிடம் இருக்கும். இதை மாஸ்டர் கீ என்பர். இதே போல் 38 மலர் மருந்துகளில் மாஸ்டர் கீ போல் செயல்படக்கூடிய ஒரு மருந்துதான் அக்ரிமனி

'பீச்' என்ற மலர் மருந்து சாப்பிட்டுவர (ஞாயிறு, செவ்வாய், வியாழன் மட்டும் இரண்டு டோஸ்கள்) உனது வியாதியில் - 25% குணமாகும்.

'வைல்டு ஓட்' சாப்பிட்டுவர - 50% பலன்

வாட்டர் வயலட் சாப்பிட்டுவர - 75% பலன்

அக்ரிமனியில் 95 to 100%

அக்ரிமனி எப்படி மாஸ்டர் ரெமடி ஆகிறது என பக்கம் 27-28ல் பார்த்தோம்.

<u>அக்ரிமனி சாப்பிட்டு வரும் காலங்களில் செய்ய வேண்டியவை மற்றும் செய்யக்கூடாதவை</u>.

நீ எதுவுமே செய்யாமல் எல்லோரும் உனக்கு அடிபணிந்து கப்பம் கட்டுவார்கள் எனில் இதற்கு நீ சில விஷயங்களில் உன்னை மாற்றிக் கொள்ள வேண்டும்.

(1) நினைத்தது நினைத்தபடி நடக்கும் என்று எண்ணாதே! (இது பொதுவாக எல்லா மலர் மருந்துகளுக்கும் பொருந்தும்)

(2) நீ போட்ட உனது schedule ஷெட்யூல் (திட்டம், அந்தந்த நேரப்படி செய்ய வேண்டிய வேலைகள் பட்டியல் படி) வேலைகள் நிச்சயமாக நடக்காது.

(3) பேச்சு, உணவு ஆகியவை ஆட்டோமேடிக் ஆக குறைந்துவிடும். ஒரு மனிதனுக்கு (நல்ல, ஆரோக்கிய மனநிலையில் உள்ளவனுக்கு) ஒரு தினத்திற்கு தேவையான கலோரி முதலிய சத்துக்கள் ஒரு மொச்சக்கொட்டை அளவு உணவில் உள்ளது). பசி எடுக்காமல் அடுத்த வேலை உணவு சாப்பிடாதே. காபி, டீ ஆட்டோமேடிக் ஆக குறைந்து விடும். இதைப் பார்த்து உனக்கு ஜீரணம் கெட்டுவிட்டதோ என்று பயப்படாதே! (இந்த சாஸ்திரம் சொல்வதை கவனி: "ஒருவன் தினசரி சாப்பிட வேண்டிய உணவின் அளவு அவனது கையால் பதினெட்டு பிடி.)

(4) விவாதம் செய்யாதே. விவாதம் நடக்கும் இடத்தில் இருக்காதே!

(5) அக்ரிமனி சாப்பிட்டு வரும் காலங்களில், யோகா, மூச்சுப்பயிற்சி, (பிராணயாமம் அல்ல!) தியானம் நிறைய செய். பலன் பன் மடங்காக பெறுவாய். வேலை ஒன்றுமில்லாத போது வாராந்திர பத்திரிக்கை,

தொலைக்காட்சி பார்க்காமல் ஸ்ரீராமஜெயம் எழுதுவது, பாராயணம் ஆகியவை செய்.

(6) உன் பணம், நேரம் ஆகியவற்றை தியாகம் செய்து நீ எவருக்கும் நன்மை செய்துவிடமுடியும் என்று நினைக்காதே. நீ மற்றவர்களுக்கு தொந்தரவு கொடுக்காமல், பிரச்சினை உண்டாக்காமல் இருந்தால் அதுவே மிகப்பெரிய காரியம். 'சும்மா இரு' என்றால் சோம்பேறியாக இரு என்று அர்த்தமல்ல. எல்லாவற்றையும் (உன்னிடம் ஒருவன் சண்டைக்கு வந்தால் கூட) பேசாமல் பார்த்துக் கொண்டிரு. பிரச்சனைகளை 'தீர்க்க' முயற்சி செய்யாதே. இதனால் அடுத்த பெரிய பிரச்சினை வரப்போவது நிச்சயம். எல்லோரும் உனக்கு பல்லக்கு தூக்கும்போது அவர்கள் கைகால் வலிக்குமே என்று கவலைப்படுகிறாயா? ஐம்பது ரூபாய் கொடுத்து ரயில்வே ஸ்டேஷனுக்கு ஆட்டோவில் செல்லும் போது அந்த டிரைவர் அந்த வருமானத்தில் எப்படி சௌகர்யமாக குடும்பம் நடத்துவானோ என்று நீ கவலைப் படுகிறாயா?

(7) எதற்கும் கவலைப்படாதே. நடப்பது நடந்தே தீரும். நீ எதையாவது தீர்க்க நினைத்தால் தலைவலிதான் மிஞ்சும். அந்த பிரச்சனை வேறு ரூபம் எடுத்து பின்னால் பயங்கரமாக வரும்.

(8) பாட்ச் மருந்துகள் கண்டுபிடிக்க, எட்வர்டு பாட்ச் பாடுபட்டு உழைக்கவில்லை. கௌதம புத்தர் ஞானம் பெற கல்வி ஏதும் கற்கவில்லை. (இவையெல்லாம் எப்போதும் எங்கும் இருக்கின்றன. நாம் தான் அவற்றை 'எடுத்துக் கொள்ளாமல்' தேடுகிறோம். கடவுள் எங்கும் நிறைந்தவன்.) இவர்கள் தனிமையில் இருந்தனர்.

(9) தனித்திரு†, விழித்திரு. பசித்திரு. பசித்துப் புசி. அக்ரிமனி சாப்பிட்டு வரும் நாட்களில் உனது தூக்க நேரம் குறைந்துவிடும்.

(10) தேவையானவற்றை எடுத்துக் கொள்ளாமல் தேவையில்லாதவற்றை எடுத்துக்கொள்வதால் டயர்டு ஆகி, காபி, டீ, மூன்று வேளை சாப்பாடு என்று ஆகிவிடுகிறது. இந்த அளவுக்கதிகமாக சாப்பிடுவதால் டயபிடீஸ், மூட்டு வலி இத்யாதி. இத்யாதி.

---

† ஞானம் பெற ஞானக்கண் திறக்க வேண்டும். இதற்கு ஊனக்கண்ணை மூட வேண்டும். ஊனக்கண் மூட அமைதியாக இருக்க வேண்டும். பேசக்கூடாது. பேசாமல் இருக்க தனிமையில் இருந்தால் தான் அது சாத்தியம்.

(11) அக்ரிமனி சாப்பிட்டு வரும் காலங்களில் நீ நினைத்ததெல்லாம் நடக்காது. எல்லாவற்றையும் போகிற போக்கில் விட்டு விடு - You must travel with the tide.

(12) மலர் மருந்துகள் எல்லாமே ஆட்டோமெடிக் மெஷின் போன்றவை. மற்ற மருந்துகள் semi-automatic. அக்ரிமனி மற்றும் வாட்டர் வயலட் fully automatic. Fully automatic எனில் உனக்கு செய்வதற்கு ஒன்றுமே கிடையாதே.

---

**மிக முக்கியமாக எதற்கும் துக்கப்படாதே.**

உலகில் மொத்தம் 108 மூலப் பொருட்கள் உள்ளன. இவற்றின் கலவை பல தாவரங்களாக, விலங்குகளாக உள்ளன. ஒரு மூலம் பொருளை எவ்வளவு சிறிய அளவு ஆக்க முடியுமோ அதற்கு atom (அணு) என்று பெயர். அதை பிளந்து இன்னும் சிறிது ஆக்க முயற்சித்தால் இலட்சக்கணக்கான வாட்ஸ் உள்ள மின்சார பவர் உண்டாகும். Atomic power stationல் இதைத்தான் செய்கிறார்கள்.

கடுகைப் பிளந்து ஏழுகடலை உட்புகுத்தி... இதுதான் நடக்கிறது நீ அக்ரிமனி சாப்பிடும்போது. ஆகையால் எந்த வேலையும் நடக்காமல் நின்றுவிட்டதே என்று பயப்படாதே. நீ இதுவரை செய்ததுபோல் நூறு, ஆயிரம் மடங்கு நடக்கும். ஆனால் நீ அதை (ஊனக்) கண்ணால் பார்க்க முடியாது.

ஞானம் என்பது நீ கேட்டு, தெரிந்து, புரிந்து, பேசக்கூடிய விஷயம் அல்ல. அனுபவித்து தெரிந்து கொள்ள வேண்டியது. மாம்பழ சுவையையும், பலாப்பழ ருசியையும் வார்த்தையால் சொல்ல முடியுமா. சாப்பிட்டு அனுபவித்து தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம்.

அலாவுதீனின் அற்புத விளக்கு போன்றது அக்ரிமனி. அது ஒரு மர்ம பங்களா. நீ கேட்டதெல்லாம் செய்யும். கிடைக்கும். அது எப்படி இதெல்லாம் நடக்கிறது என்று நீ ஆராய்ச்சி செய்தால் (தினம் ஒரு) பொன் முட்டையிடும் வாத்தின் வயிற்றைக் கிழித்து ஏமாந்த கதைதான்.

கல்வெட்டுகளில் எழுத்துக்களும் இருக்கின்றன. சிற்பங்களும் இருக்கின்றன.

பேசும் எழுத்து என்று நாம் சொல்வதில்லை. ஆனால் பேசும் சிலை, பேசும் சிற்பம் என்று சொல்கிறோம். அதாவது பேசாமல் பேசுகின்றன. கண்களால், அழகான கை கால், முகத்தால்.

தபாலில் வந்த கடிதத்தில் உள்ள விஷயத்தை படித்துவிட்டு கசக்கி எறிந்து விடுகிறோம். போட்டோவை அவ்வாறு எறிவதில்லை. அது எப்படி இருந்தது என்று வார்த்தைகளால் சொல்ல முடியாது. போட்டோ காண்பித்தால் தான் பார்ப்பவருக்கு புரியும்.

நாம் பேசும்போது நமது உணர்ச்சி, விருப்பு, வெறுப்புகளை வார்த்தைகளைவிட அங்க அசைவு, செய்கைகளால் தான் நன்றாக தெரிவிக்கிறோம்.

அக்ரிமனி பற்றி எழுதினால் ஆஞ்சநேயர் வால் போல் நீண்டு கொண்டே போகும். முடிக்கவே முடியாது.

ஊமை பாஷை. வார்த்தைகளை முடிந்த வரை குறைத்து சைகையால் பேச பழகிக்கொள். மற்றவர்களைவிட ஊமைகளால்தான் அதிக பிரச்சனை வராது.

'ஊமை ஊரைக் கெடுக்கும்' என்றால் ஊரில் உள்ள பிரச்சினைகள் இல்லாமல் போய் விடும் என்று அர்த்தம்.

Symbolism என்பது 50% மார்க் வாங்கிய அக்ரிமனி-டைப். (எழுத்துக்கள் இல்லாமல் படம் மட்டும் உள்ளே ஜோக்குகள்.)

அடிக்கடி ஜோக் உதிர்க்கிறான் - நெகடிவ் அக்ரிமனி

எப்போதாவது முத்தான விஷயம் ஒரு தடவை சொல்கிறான் - பாசிடிவ் அக்ரிமனி. *(Golden words are not repeated.)*

முத்து, பவளம் போன்றது அக்ரிமனி என்று பார்த்தோம்.

அக்ரிமனி கடவுள் சம்மந்தப்பட்டது. ஏனெனில் தேவியே தன்னை பாதுகாத்துக்கொள்ள நானாவித இரத்தினங்களால் ஆன கோட்டையில் வாசம் செய்கிறாள்.

நவரத்தினங்கள் அணிவதும் பாசிடிவ் அக்ரிமனி தன்மை நம்மிடையே வளர உதவும் ஒரு வழி. பர்சனாலிடி டெவலப்மெண்ட் கோர்ஸ்க்கு போவதை விட அந்த பணத்தில் இரத்தினங்கள் வாங்கி அணிந்துகொள்வது எவ்வளவோ மேல்.

பல நாட்கள் வரை கெடாமல் வைத்திருக்கு 500 மில்லி பழரசத்தில் ஒரு சிட்டிகை பொடாசியம் பாமாஸ்கனேட் போட்டுவைப்பர். preservative. அக்ரிமனி நமது ஆரோக்கியத்தை preserve செய்கிறது. காய கல்பம் மாதிரி.

மூன்று வித காயகல்பம் உள்ளன.

Olive - உடலுக்கு

Walnut - மூளைக்கு (Brain, boredom)

அக்ரிமனி - மனம், ஆன்மா (Refresher, Reformation)

ஓவர்ஹால் செய்து கீரிஸ் போட - கிராப் ஆப்பிள், ஹார்ன்பீம்.

ஆக அக்ரிமனி + வால்நட் + ஆலிவ் + கிராப் ஆப்பிள் + ஹார்ன்பீம் என்பது சூப்பர் காய கல்பம்.

---

ஃபில்ட்டர்கள் (filters) பல வகைப்படும்:

(1) காபி ஃபில்டர், டீ வடிகட்டி நுண்ணிய துளைகள் உள்ளது. டீ சக்கை அல்லது தேன், பழரசபாட்டிலில் நிறைய எறும்பு வந்தால் வடிகட்ட உதவுபவை.

(2) 100-300 அடி ஆழத்திலிருந்து வரும் தண்ணீரில் அத்துடன் இரண்டறக்கலந்து அதன் நிறத்தையே மாற்றி விட்ட பொருள்களை பிரித்தெடுக்க de-salination plant 15-30 ஆயிரம் ஆகும். இது ஸெராட்டோ.

(3) ஆசுபத்திரிகளில் சில நோய் உள்ளவர்களுக்கு சாதாரணமாக நாம் அன்றாடம் குளிக்கும் தண்ணீரில் உள்ள சில உப்புக்கள் ஒத்துக் கொள்ளாது. குறிப்பிட்ட உப்புச் சத்துக்களை மட்டும் வடிகட்டக்கூடிய பிரத்தியேக பில்டர்கள் உள்ளன. சில பொருட்களை பில்டர் அடிப்பாகத்தில் போட்டு அதன் மூலம் தண்ணீர் செல்லும்போது அந்த குறிப்பிட்ட உப்பை அவை உறிஞ்சிக் கொண்டு விடும். இது வாட்டர் வயலட். (பெயரிலேயே தண்ணீர் இருப்பதை கவனி!)

(4) தண்ணீர் கலந்த பாலில் அன்னபட்சி பாலை மட்டும் குடித்து விட்டு தண்ணீரை அப்படியே வைத்து விடும். இதற்குத்தான் அக்ரிமனி (நமது உடல், மன அமைப்புக்கு ஏற்ற விஷயங்கள் எவை என்று நமக்கு தெரியாததால்) எல்லாவற்றையும் தலை மீது போட்டுக் கொண்டு திண்டாடுகிறோம். தேவையானதை மட்டும் எடுத்துக் கொண்டால் கஷ்டம், கவலை, பணப் பற்றுக்குறை வராது. இதற்குத்தான் அக்ரிமனி. ஆகையால்தான் இது 95% வியாதி, பிரச்சினைகளை நீக்கி விடுகிறது. இதனால் இதை மாஸ்டர் ரெமடி என்று சொல்கிறோம்.

---

அக்ரிமனி நெகடிவ் தன்மைக்கு மிகச் சரியான உதாரணமாக சினிமா தயாரிப்பில் ஒரு விஷயத்தை இங்கு குறிப்பிடலாம்.

ஒளியமைப்பு, வசனம், பாட்டு ஆகியவை எப்படியிருந்தாலும் கூட பரவாயில்லை. ஆனால் மேக்கப் செய்பவர் மட்டும் இல்லையெனில் (கதை எவ்வளவு நல்லதாக இருந்தாலும்) படம் கோவிந்தாதான். ஏனெனில் எந்த ஒரு நடிகன், நடிகையையும் மேக்கப் இல்லாமல் நாம் பார்த்தால் பார்க்க சகிக்காது. மேக்கப் மேன் தான் உயிர்நாடி.

இதே போல் தான் எடிட்டரும். எடிட்டர் இல்லாமல் அந்த படம் போட்டால் தியேட்டரில் சலசலப்பு, கல் எறிதல் தான் நடைபெறும்.

மேக்கப் மேன் 'சோனு, மூனு'க்களை அழகு படுத்துகிறான் (கவர்ச்சி). எடிட்டர் சீன்களை வரிசைப் படுத்துகிறான்.

உமி, தவிடிலிருந்து எண்ணை எடுக்கிறான் - வாட்டர் வயலட்

குப்பையிலிருந்து மின்சாரம் தயாரிக்கிறான் - அக்ரிமனி

(ஆமாம். குப்பை போன்ற நடிக, நடிகை முகங்களை நாம் ஆவலுடன் பார்க்கும்படி அழகுபடுத்துகிறான் மேக்கப் மேன். குப்பையான அரசியல் செய்திகளை பாலீஷாக எழுதுகிறான் எடிட்டர்.)

நிறங்களில் மஞ்சள் நிறம் கடவுள் தன்மை பற்றியது. அக்ரிமனி குடும்பத்தை சேர்ந்த மலர்கள் எல்லாம் மஞ்சளாகத்தான் இருக்கும்.

நவரத்தினங்களில் நல்ல சிவப்பாக உள்ளது பவழம். சிகப்பு விளக்கு 'நில்' என்று சொல்லி வாகனங்களை அபாயங்களிலிருந்து எச்சரிக்கை செய்து காப்பாற்றுகிறது. ஆனால் பவழம் மஞ்சள் காஸ்மிக் நிறத்தை மட்டுமே வெளியிடுகிறது. (இதை ஊனக் கண்ணால் பார்க்க முடியாது.) மஞ்சள் தெய்வ அருள் என்பதால் பவழம் அணிய அக்ரிமனி பாசிடிவ் தன்மைகள் நமக்கு உண்டு (ஏழரை காரட்டுக்கு குறையாமல் அணிய வேண்டும்.)

வேலைகளில், வாழ்க்கையில் நிறைய தடங்கள் ஏற்பட்டால் பவழம் அணியவேண்டும் என்பர். பவழம் அணிவதால் தடங்கல் ஏற்படுவது நிற்காது. மாறாக தடங்கள் ஏற்படாத விஷயங்களை மட்டும் எடுத்துக் கொள்கிறோம். ஒரு தொழிலில் உனக்கு நிறைய தடங்கல்கள், பிரச்சினைகள் வருகிறது எனில் அது உனக்கு ஏற்றது அல்ல என்று உணர்ந்து வேறு தொழில் முயற்சி செய்து பார்.

ரிப்பேர் ஆகி விடுவது (breakdown) என்பது அக்ரிமனி சம்மந்தப்பட்டது.

வால்நட், அக்ரிமனி ஆகியவை auto-pilot மாதிரி. Pilot என்பவன் வழி நடத்துபவன்.

B.A. பாஸ் செய்ய Text-book பாடம் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர் — பீச்

Ph.D. படிக்க guide ஆக இருக்கிறன் (Thesis என்பது கண்டுபிடிப்பு பற்றியது) — வாட்டர் வயலட்

Vocational Guidance தருகிறன் (நீ படித்த படிப்பிற்கேற்ற வேலே எது, எங்கு என தெரிய) — ஸெராட்டோ

ஆன்மீக குரு — அக்ரிமனி

அடிமைகளே சவுக்கால் சாட்டையால் அடித்து தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கிறன் — வாட்டர் வயலட்

குதிரை லகானே கையில் வைத்திருப்பவன் (ஆட்டிப் படைக்கிறன்)

ஆனல் மனிதர்களேயே ஆட்டிப் படைப்பவன் நமக்கெல்லாம் மேல் நிலேயில் உள்ள கடவுள். அவனது இழுப்பிற்கு ஏற்ப நாம் மரியாதையாக நடந்து கொண்டால் சவுக்கடி (பணப்பிரச்சினே, நோய், கஷ்டம், கவலே போன்ற சாட்டையடி) நம் மீது விழாது.

கடவுள் ஆட்டி வைக்கிறபடி அதை மட்டுமே செய்ய, அக்ரிமனி சாப்பிட்டு வா. இதனல் உனக்கு மகாராஜா போன்ற வாழ்வு நிச்சயம் உண்டு.

பத்தியம் முக்கால் பங்கு, மருந்து கால் பங்கு (பத்தியத்தினலே குணப்படுத்துகிறன்) — வாட்டர் வயலட்

அனுபானத்தின் உதவியால் மருந்தை ஆட்டிப்படைக்கிறன் — அக்ரிமனி

[சித்த வைத்தியத்தில் உள்ள இரகசியம் என்னவெனில் அனுபானம் தான். ஒரே மருந்தினல் (அகஸ்தியர் மெழுகு) பற்பல வியாதிகளே அனுபானம் மாற்றிக் கொடுத்து சரி செய்யலாம். தேனில் குழைத்து கொடுக்க பேதி நிற்கும். மோருடன் சாப்பிட மலச்சிக்கல் குணமாகும் போன்றவை.]

| | | |
|---|---|---|
| Teacher | — | Beech |
| Guide | — | Cerato |
| Pioneer | — | Water Violet |
| Pilot | — | Agrimony |

அக்ரிமனி தொடர்ந்து கொண்டேயிருக்கிறது
ஆனால் எமது எழுத்து இத்துடன் முடிகிறது

---

எமது அடுத்த வெளியீட்டை ஆவலுடன் எதிர்பாருங்கள். அதன் தலைப்பு 'இம்பேஷன்ஸ் மற்றும் வாட்டர் வயலட்' — ஓர் ஒப்பு நோக்குதல் (Comparison)

வாட்டர் வயலட் (focussing) — ஆம்புலன்ஸ் (எல்லோரும் வழி விடுகின்றனர்)

இம்பேஷன்ஸ் (execution) - தனிக்காட்டு ராஜா (இவன் வழியில் எவரும் வரமாட்டார்கள்)

இரண்டும் ஒன்றல்ல.

---

**Explanatory Note:**

மனம் (Mind) என்பது ஆன்மா (soul, God or Holy Spirit)விற்கும் உடலுக்கும் (Brain and Body) நடுவில் உள்ள ஒரு Junction box போன்றது.

---

ஒருவன் உன்னிடம் சண்டைக்கு வந்தால்; சண்டைக்கு இழுத்தால் பேசாமலிருந்து (அவன் சென்றதும் அக்ரிமணி நாந்கைந்து டோஸ் 15-45 நிமிடத்திற்கோர் தடவை சாப்பிடு.) நீ பதில் பேசாமலிருக்கும் பட்சத்தில் அவன் பேசாமல் போய் வேறு எங்காவது அந்த ஆத்திரத்தில் மோதிக் கொள்வான். இச்சமயத்தில் நீ அக்ரிமனி சாப்பிடுவதால் உனது திறமை அதிகமாகும் (விவாதம் செய்வதால் உடல், மனம் நூறு மடங்கு சக்தி விரயமாகிவிடும்) தவிர உனது வருமானம் 20-50 மடங்கு அதிகரிக்கும்.

---

அக்ரிமனி தேவைப்படும் நபர் சொல்லும் வார்த்தைகள்: "(எனக்கு) மனசு சரியில்லை."

அக்ரிமனி - வாட்டர் வயலட்

இவ்விரண்டு மருந்துகளுமே நமது வியாதிகள், வாழ்க்கைப் பிரச்சினைகளை தீர்த்து (நமக்கு நியாயமாக கிடைக்க வேண்டிய) நிறைய பணம், recognition, reward, பதவி உயர்வு கிடைக்கச் செய்கின்றன. ஆனால் ஒரு வித்தியாசம் என்னவெனில் இவை வேலை செய்யும் விதம்.

(1) அக்ரிமனி (ஞாயிறு, செவ்வாய், வியாழன் ஆகிய கிழமைகளில் மட்டும் (காலை, மாலை 2 மாத்திரை) சாப்பிட்டு வர (இடையில் முடிந்தவரையில் வேறு மலர் மருந்து சாப்பிடாமல் இருப்பது நல்லது) உனது வியாதிகள்† அதுவாகவே குணமாகி விடும்.

(2) வாட்டர் வயலட் (மேற்சொன்ன மூன்று நாட்கள் மட்டும் தொடர்ந்து) சாப்பிட்டு வர எங்கு சென்று/யாரைப் பார்த்து/என்ன செய்தால் நமது நோய்கள் குணமாகுமோ, பணப்பற்றுக்குறை நீங்குமோ அதை ஆட்டோமேடிக் ஆக செய்து விடுகிறோம்.

இன்றும் சரியாக சொல்ல வேண்டுமானால் உலகில் இப்போது நடைமுறையில் இருக்கக்கூடிய வழிகளில் (சித்தா, ஜோஸ்யம், வாஸ்து) நமது பிரச்சினை தீரும் என்றால் வாட்டர் வயலட் அந்த இடத்திற்கு நம்மை அழைத்துச் சென்று விடும்.

இதுவரை எவருக்குமே தெரியாத (ஆனால் உலகில் அது இருக்கிறது. Nature Produces in abundance) வழியில் உனது பிரச்சினை தீரும் எனில் அதற்கு அக்ரிமனி. உதாரணமாக இந்நூலாசிரியருக்கு சில உடல் (நோய்) பிரச்சினை. வேறு எதற்காகவோ அக்ரிமனி சாப்பிட்டு வரும் காலத்தில் திருவண்ணாமலை சென்று அங்கு இரமண ஆஸ்ரமம் சிறிய தியான மண்டபத்தில் மூன்று நிமிடம் மட்டுமே தியானம் செய்ய இரண்டு முகம் உருத்திராட்சம் ஒன்றேயொன்று (கழுத்தில்) அணிந்து கொள் என்று யாரோ சொல்லியது போல் தோன்றியது. மன டென்ஷனால் nerous dyspepsia அஜீரணம் உண்டாகி இதனால் பல பிரச்சினைகள். பின்னால் சாஸ்திர நூல்களை பார்த்த போது மன அமைதிக்கு இருமுக ருத்ராட்ச் அணியலாம் என்று இருந்தது.

இது அணிந்ததிலிருந்து எல்லா பிரச்சினைகளும் ஒட்டுமொத்தமாக தீர்ந்தன. அக்ரிமனி என்பது mystic விஷயங்களுக்கு. mystic என்றால் hidden meaning என்று சொல்லலாம்.

ஸ்வீட் செஸ்ட்நட்டில் கடவுளிடம் சரணாகதி அடைகிறான்.

அக்ரிமனியில் கடவுளாக ஆகி விடுகிறான். mystic என்ற வார்த்தைக்கு ஆக்ஸ்ஃபோர்டு டிக்ஷனரியில் அர்த்தம் பார்த்தால் இது புரியும்.

---

† 'வியாதிகள்' என்று நாம் எங்கு எழுதினால் அதில் பணப்பற்றுகுறை, வாழ்க்கைப் பிரச்சினைகள், பணப்பற்றுக்குறை ஆகிய எல்லாமே அடங்கும்.

mystic - one who seeks by comtemplation and self-surrender to obtain union with or absorption into the deity.

கோயிலில் ஜோதியாக மாறி கடவுளின் சிலைக்குள் சென்று கடவுளுடன் ஐக்கியமான மாணிக்க வாசகர், பீடம் ஏறிய ஆதிசங்கரர் இவர்களை இதற்கு உதாரணமாக சொல்லலாம்.

---

**வாட்டர் வயலட் மற்றும் அக்ரிமனி பற்றி மேலும் சில குறிப்புகள்**

(எங்கெங்கு ஒரு மருந்து பெயர் மட்டுமே எழுதுகிறேமோ, அங்கு இன்னொரு மருந்தின் பெயரையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். ஏனெனில் இவ்விரண்டு மருந்துகளையும் பிரித்துப் படிப்பது அவ்வளவு சுலமான வேலை அல்ல.)

அக்ரிமனி சாப்பிட (1) ஜெயிலில் உள்ளவன் வெளியே (விடுதலையாகி) வந்து விடுவான். (2) வெளியில் (சுதந்திரமாக) உள்ளவன் ஜெயிலுக்குள் சென்று விடுவான். (ஈ-சிங் என்ற சீன சாஸ்திர நூல்)

எப்படியாவது சாமார்த்தியமாக பேசி, முயற்சி செய்து விரைவில் விடுதலை பெறத்தான் எந்த கைதியும் விரும்புவான். சாமர்த்தியத்திற்கு அக்ரிமனி.

'வெளியே உள்ளவன் அக்ரிமனி சாப்பிட உள்ளே சென்று விடுவான்' எனில், வெளி உலகில் உள்ள ஆராவாரங்களிலிருந்து கவனத்தை தன் உள் மனது பக்கமாக திருப்பி, தன்னை கடவுள் என்ற ஜெயிலில் அடைத்துக் கொண்டு விடுவான் என்று அர்த்தம்.

Return என்று சீன வேதாந்தத்தில் சொலவர். 'திரும்ப' என்றல் மனதை (வெளிப்புற உலகியல் விஷயங்களிலிருந்து) உட்பக்கமாக திரும்பி ஆன்மாவை பார்ப்பது என்று அர்த்தம்.

ஆத்ம ஸ்வரூப தரிசனம் கிடைக்கப் பெற்றவனல், அந்த அனுபவத்தில் இருக்கும் வரை பேச முடியாது.

அக்ரிமனி என்ற மலர் மருந்து தங்க பஸ்பம் போன்றது. தங்க பஸ்பம் எல்லா வியாதிகளையும் குணப்படுத்தும். ஆனல், எவர் வேண்டுமானலும் சாப்பிட பலன் உண்டாகாது.

தங்க பஸ்பம் என்னென்ன வியாதிகளுக்கு கொடுக்கலாம் என்று ஈ-சிங்-ஐ கேட்டபோது "எல்லாவிதத்திலும் honest ஆக உள்ளவருக்கு மட்டும் கொடுக்க வேண்டும். எல்லா வியாதியும் குணமாகும் என்று பதில் கிடைத்தது."

நாம் ஏற்கெனவே எழுதியுள்ள படி அக்ரிமனி சாப்பிட்டுவரும் காலங்களில் வெறுப்பு, தூஷணை, சாபம் கொடுத்தல், வன்மம், பிறருக்கு தீங்கு செய்தல் ஆகியவற்றை அறவே தவிர்ப்பது அவசியம்.

---

காலையில் ரெட் செஸ்ட்நட் நீ ஒரு டோஸ் சாப்பிட அன்று (உனக்கு தெரிந்த வைத்திய முறையில் குணமாகக் கூடிய) மூன்று நோயாளிகள் உனக்கு கிடைப்பர்.

அக்ரிமனி சாப்பிட தனது பிரச்சினைகளுக்கு தீர்வு கேட்டு மூன்று நபர்களுக்க குறையாமல் உன்னிடம் வருவர். (You are a Grievance Redressal Officer with Agrimony.)

சமூக, ஊர் பிரச்சினைகளை நீ தீர்க்க (ஊர்ப் பஞ்சாயத்து தலைவர்) - வாட்டர் வயலட்

சமுதாய பிரச்சினை - ராக் ரோஸ்

---

Impatiens மற்றும் வாட்டர் வயலட்: ஓர் ஒப்பு நோக்குதல் (comparison).

இம்பேஷன்ஸ் என்பது திறம்பட செய்து முடித்தல் (executive)

வாட்டர் வயலட் - தன் ரூட்டில் முன்னேறிக் கொண்டே செல்கிறான். (focussing)

கருமமே கண்ணுயினார் என்பது வெர்வைன்.

சமுத்திரம் பரந்து விரிந்து கிடக்கிறது. வாட்டர் வயலட்

இம்பேஷன்ஸ் - மெஷின் தயாரிப்பில் சிறப்பாக செய்து முடிப்பதால் businessman ஆகிறான்.

அகல உழு - வாட்டர் வயலட்

ஆழ உழு - இம்பேஷன்ஸ்

இவ்விரண்டு மருந்துகளையும் சேர்த்து சாப்பிட்டுவர உனது வருமானம் நூறு மடங்கு ஆகிவிடும்.

ஒரு விவரம் பற்றி தெரிந்துகொள்ள பஸ்ஸில் 120 கிலோமீட்டர் பயணம் செய்கிறாய்.

அல்லது

ஒரு நோயாளியை அவன் வீட்டில் பார்த்து வைத்தியம் செய்ய 40 கிலோமீட்டர் பயணம் செய்கிறாய். ஒரு மணி பயணம் செய்யும் நேரம் நீ ஒரு பயணியாக இருக்கிறாய். டாக்டர் அல்ல. அந்த வீட்டில் நோயாளியை 15-30 நிமிடம் பரிசோதனை செய்யும் போது மட்டும் தான் நீ டாக்டராக இருக்கிறாய். பிறகு வீடு திரும்ப மறுபடியும் ஒரு மணிநேரம் பஸ் பயணியாக இருக்கிறாய்.

ஆனால் மேற் சொன்ன இம்பேஷன்ஸ் + வாட்டர் வயலட் சேர்த்து சாப்பிட்டுவர பஸ் பயணம் அறுபது நிமிடத்தில் பஸ்ஸிலேயே 4-5 நபர்களுக்கு வைத்திய ஆலோசனை கொடுப்பாய்.

World is wide. உலகம் பெரிது. அதிலிருந்து நீ எவ்வளவு வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம்.

அக்ரிமனி - வாட்டர் வயலட், பிரித்து படிக்க முடியாது என்று சொன்னோம்.

அக்ரிமனி-டைப் நபர் உனக்கு முத்தான விஷயங்கள் சொல்கிறான்.

வாட்டர் வயலட் சாப்பிட முத்தான விஷயங்களை நீ சென்று எடுத்துக் கொள்கிறாய்.

---

## வேறு சில மருந்துகள் பற்றி இனி படிப்போம்

(கீழே ஒரு மலர் மருந்தின் மேல் நிலை உபயோகங்களைப் பற்றி எழுதுகிறோம். அந்த மருந்தின் பெயரை மாற்றி 'அபிஷேக்' என்று சொல்கிறோம். அது என்ன மருந்து என்று கண்டு பிடியுங்கள் பார்ப்போம்!)

இவனை self-contained என்று சொல்லலாம். in-built என்றும் சொல்லலாம். fully automatic என்பர். தவிர Life-time warranty. பின் நமக்கு வேறு என்ன வேண்டும்?

இவர் அக்ரிமனிக்கு அண்ணன். அக்ரிமனியில் எல்லாவற்றையும் உன் காலடியில் சமர்ப்பிக்கின்றனர். அபிஷேக்கில் அதுவாக இருக்கிறது.

கார் டயர் பஞ்சர் ஆகி விட்டால் சக்கரத்தை கழற்றி ஸ்டெப்னியை எடுத்து மாட்டி பயணம் தொடரலாம். அடுத்து 5-10 கிலோ மீட்டரில் அந்த சக்கரமும் பஞ்சர் ஆகி விட்டால். . .? நடுரோட்டில் நின்று சக்கரத்தை கழட்டி எடுத்து பஸ்ஸில் அடுத்த ஊர் சென்று பஞ்சர் ஒட்டி திரும்ப பஸ்ஸுக்காக காத்திருந்து, பஸ் பிடித்து வந்து சக்கரம் மாட்டி. . . . 3-4 மணி நேரம் வேஸ்ட்.

சில வருடம் முன்பு ஒரு திரவப்பொருள் அறிமுகம் செய்யப்பட்டது. இதை ட்யூப்க்குள் ஊற்றி காற்று நிரப்பி மாட்டி விட்டால், வழியில் எங்காவது பஞ்சர் ஆகி விட்டால் உடனே ட்யூப்-ல் உள்ள அந்த திரவம் ஓட்டையை அடைத்து அப்பகுதி காய்ந்து, ஆட்டோமேடிக் ஆக பஞ்சர் ஒட்டப்பட்டு விடுகிறது. Trouble-free performance (ஹார்ன்பீம் அல்ல!)

அக்ரிமனியில் உனக்கு வேண்டியவை (மற்றவர்களால்) நீ கேட்காமலேயே செய்யப்பட்டு விடும். அபிஷேக் என்ற மருந்தில் நீயே செய்து கொள்கிறாய். அல்லது, அதுவாகவே இருக்கிறது. (சுயம்பு லிங்கம் மாதிரி).

ஸெராட்டோ, வைல்டு ஓட் - all rounder

அபிஷேக் - all in all

அபிஷேக் என்ற மருந்தை 'all in all' என்று சொல்வதை விட "all-in-all" நபர்களை தன்கீழ் வேலைக்கு வைத்திருக்கிறான் என்று சொல்வதே சரி.

இலஞ்சம் கொடுத்து போலீஸ் இன்ஸ்பெக்டரை தன் கையில் வைத்திருக்கிறுன் - சிக்கரி

ஆனுல் அபிஷேக் டைப் நபர், ஐ.ஜியை கையில் போட்டு வைத்துக் கொள்வதால், போனிலேயே இன்ஸ்பெக்டரிடம் பேசி காரியத்தை நடத்திக் கொள்கிருன்.

போலீஸ் ஸ்டேஷனுக்கு தலைவன் - இன்ஸ்பெக்டர்

பல போலீஸ் ஸ்டேஷன்களுக்கு chief ஆக உள்ள சூபரின்டெண்ட் அல்லது அஸிஸ்டெண்ட் கமிஷனர் ஒரு போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்தால், இன்ஸ்பெக்டர் வயிற்றில் புளியை கரைக்கிறது.

ஐ.ஜி.யே வந்தால் குலை நடுங்குகிருன்.

மற்றவர்களை குலை நடுங்க வைக்கிருன் அபிஷேக்.

வல்லவனுக்கு வல்லவன் - நெகடிவ் வைன், பாசிடிவ் வாட்டர் வயலட்

ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டுமானுல் பத்து இலட்சம் (இலஞ்சம்) கொடுத்து ஒருவனை விலைக்கு வாங்கி விட முடியும் என்ருல், உன்னிடம் அந்த பணம் இல்லாத பட்சத்தில் 'அபிஷேக்' சாப்பிட அவனை விலைக்கு வாங்கி விட்டால் என்னென்ன சாதித்துக் கொள்ள முடியுமோ அவற்றை பணம் ஏதுமில்லாமலேயே சாதித்துக் கொண்டு விடுவாய்.

ஹால்லி, ஹார்ன்பீம், வைன் டைப் நபர்களை பார்த்ததும் மற்றவர்கள் பயப்படுகின்றனர்.

அக்ரிமனி, வாட்டர் வயலட் நபர்களின் போட்டோவை வீட்டில் மாட்டி வைக்கின்றனர்.

அபிஷேக் பெயரை கேட்டதும் குலை நடுங்குகின்றனர்.

ஒரு மருந்து 10-20 மடங்கு வேகமாக, ஆழமாக வேலை செய்ய அத்துடன் அக்ரிமனி சேர்த்து சாப்பிடு. நூறு மடங்கிற்கு 'அபிஷேக்'.

தங்கச் சுரங்கம் வைத்திருக்கிருன் - வாட்டர் வயலட்

ரூபாய் நோட்டு கட்டுகளை (செங்கல் போல் அடுக்கி) வீடு கட்டுகிருன் - வைல்டு ரோஸ்

அபிஷேக், தங்கத்தாலேயே வீடு கட்டுகிறான்.

ஸ்விஸ் வங்கியின் தலைவன் போல் பவர்ஃபுல் ஆக அபிஷேக் சாப்பிடு.

எப்படியெனில் 2002-ம் ஆண்டு இந்திய விமானம் ஒன்று கடத்தப்பட்டு கந்தஹார் விமான நிலையத்தில் இருந்த போது அதில் சுவிஸ் வங்கியின் பெரிய அதிகாரி (கள்ள நோட்டா, நல்ல நோட்டா என்று கண்டுபிடிக்கும் கரன்ஸி நோட் எக்ஸ்பர்ட்) ஒருவரும் இருந்தார்.

(இந்தியாவில் உள்ள எல்லா அரசியல்வாதிகளும் சுவிஸ் நாட்டு வங்கியில் கோடிக்கணக்கில் வைத்திருந்ததால்) கறுப்புப்பூனை படை போன்றவற்றை அனுப்பி கடத்தல்காரர்களை பிடிக்கப் போய் தனது வங்கி அதிகாரியின் உயிருக்கு ஆபத்து ஏற்பட்டால், தன் நாட்டு வங்கிகளில் கணக்கு வைத்திருக்கும் இந்திய பிரமுகர்/அரசியல்வாதிகளின் பெயர்களை வெளியிட்டு விடுவோம் என்று சுவிஸ் வங்கிகள் இந்திய அரசை மிரட்டியதால், வேறு வழியில்லாமல் கடத்தல்காரர்கள் கேட்ட (இந்திய சிறையில் அடைக்கப்பட்டிருந்த) தீவிரவாதியை இந்திய அரசு விடுவிக்க வேண்டிய கட்டாயத்திற்கு தள்ளப்பட்டது. (இது நீ படிக்கும் ஹிந்து பத்திரிகையில் வந்த செய்தி)

(இந்த வெட்கக்கேட்டை ஏன் எழுதுகிறோம் எனில், பல வருடங்கள் முன்பு, அமெரிக்க முக்கிய அதிகாரியுடன் அமெரிக்க விமானம் கடத்தப்பட்டு, கடத்தல்காரர்கள் அமெரிக்க அரசு சிறையில் உள்ள தீவிரவாதியை விடுவிக்க கேட்ட போது, அமெரிக்க அரசு அடிபணிய மறுத்து அந்த விமானம் தீவிரவாதிகளால் தகர்த்தப்பட்டு எல்லா பயணிகளும் இறந்தனர்.)

ஸ்வீஸ் வங்கிகள் இந்திய அரசை அடிபணிய வைத்தது போல் ஒரு அரசையே அடி பணிய வைக்க அபிஷேக்.

தன் விரல் அசைவில் மாஃபியா போன்ற No.1 கடத்தல்காரர்களை கூட ஆட்டி வைக்கிறான் - இம்பேஷன்ஸ் (இத்தாலி நாட்டு அக்னல்லி)

போனிலேயே காரியத்தை சாதித்துக் கொள்கிறான் - அபிஷேக்

அபிஷேக் + இம்பேஷன்ஸ் + கார்ஸ் + ஹால்லி + ஹார்ன்பீம்

சேர்த்து சாப்பிட்டுப் பார். நீ உலகம் போற்றும் உத்தமனுகை ஆகி விடுவாய். இதனுல் ஈராக்கில் குண்டு போடுவதை நிறுத்த அமெரிக்க அரசிடம் சொல்லி செய்வதோடு அதே வாயால் சதாம் உசேனையும் அடி பணிய வைக்கிருய். எவ்வித அன்னிய நாட்டு படையெடுப்பு, உள்நாட்டு கலவரம் அல்லது எதிர்கட்சி புகார் என்ற எந்த பிரச்சினையும் இல்லாமல் இருபது வருடங்களுக்கு மேலாக சிங்கப்பூர் பிரதம மந்திரி தன் பதவியில் உட்கார்ந்திருக்கிருன். இதே போல் எந்த கட்சி ஆட்சிக்கு வந்தாலும், எலிசபெத் இங்கிலாந்து நாட்டு மகாராணியாக நீடிக்கிருள் எலிசபெத்.

மிகப்பெரிய பதவியில் உள்ள ஒரு மனிதரின் சிபாரிசினுல் (influence) மட்டுமே ஒரு வேலை உனக்கு நடக்க முடியும் எனில் (இதற்கு அநேகமாக பல லட்சம் செலவாகலாம் அல்லவா?) அபிஷேக் சாப்பிட்டு வர அந்த வேலை முடிந்து விடும். (விடை 39ம் பக்கம்)

---

இனி வேறு ஒரு மலர் மருந்து பற்றி கீழே விலாவாரியாக 'அசோக்' என்ற மறுபெயர் கொடுத்து எழுதுகிரேம். அது என்ன மருந்து என்று கண்டுபிடியுங்கள் பார்ப்போம்.

சிமிண்ட் - அஸ்திவாரம் - மண் ஆய்வு (soil test)

அஸ்திவாரம் 'சரியாக' இல்லாவிட்டால் ('பலமாக' என்று நாம் எழுதவில்லை) ஐந்து மாடிக் கட்டிடம் 'ஆட்டம்' கண்டு விடும்.

சிமிண்ட் சரியில்லை (கலப்படம்) எனில் சுவர்கள் கோவிந்தா.

மண் ஆய்வு (soil test) செய்யாமல் அல்லது 'சரியாக' செய்யாததால் சென்னை வேளச்சேரியில் 2002-ம் வருடம் பல மாடிக்கட்டிடம் கீழே இறங்கி முதல் தளம் பூமிக்குள் புதைந்து, புதையுண்ட ஃப்ளாட்டுகளில் உள்ளவர்களை இன்று வரை கூட வெளியே எடுக்க முடியவில்லை. (ரெஸ்க்யூ ரெமடி மற்றும் ராக் ரோஸ் என்ற மலர் மருந்துகள் அந்த நேரத்தில் உதவியிருக்கும் என்பது வேறு விஷயம்.)

ஓடும் ரெயிலில் ரிசர்வ் கம்பார்ட்மெண்டில் சாதா டிக்கெட் கூட இல்லாமல் பயணம் செய்தால் எப்படி இருக்கும். சிறிதே கற்பனை செய்து பாருங்களேன்!

வெளிநாடு செல்கிறாய். கையில் பாஸ்போர்ட் தொலைந்து விட்டால்... (இதற்கு வாட்டர் வயலட்-ம் வருகிறது.)

grip (பிடிப்பு, பிடிமானம்) இல்லாத நிலை. Feeling of being isolated. உலகில் தான் தனித்து விடப்பட்டிருப்பதாக உணர்தல்.

முதல் தடவையாக ஒரு ஊருக்கு செல்கிறாய். அங்கு போய்தான் ஹோட்டல் தேடி அறை வாடகைக்கு எடுத்து தங்க வேண்டும். ரயிலில் போய் இறங்கியவுடன் முழித்துக் கொண்டே செல்கிறோம்.

வாட்டர் வயலட்டிலும் இம்பேஷன்ஸ்-லும் வேண்டு மென்றே தனித்திருக்கிறான். அசோக் தனித்து விடப்பட்டிருப்ப தாக உணர்கிறான்.

பயம் என்பது மிமுலஸ்.

கோழை, கோழைத்தனம், வெட்கம் என்பது 'அசோக்' (கோழை: மன உறுதியோ, துணிச்சலோ இல்லாத நபர், coward)

(வெட்கம் - பிறர் முன்னிலையில் இயல்பாக இருக்க முடியாத அல்லது தன் விருப்பத்தை தெரிவிக்க முடியாத தயக்க உணர்வு; நாணம்.)

ஒரு தாய் தனது ஐந்து வயது மகனை அழைத்து வருகிறாள் அவனிடம் 'உனக்கு என்ன (செய்கிறது) சொல்?' என்று நான் கேட்க அவன் தனது அம்மாவைப் பார்த்து, 'நீயே சொல்லு அம்மா?' என்கிறான். இவனுக்கு அசோக்.

பரீட்சை ஹாலில் கையில் கேள்வித்தாளை வைத்திருக்கும் மாணவனுக்கு ஒரு கேள்விக்கு கூட பதில் தெரியாமல் விழிப்பது திருட்டு முழி போல்தான் இருக்கும். மிகவும் பரிதாபகரமானதாக இருக்கும். [excitement-ல் கேள்விகளை கூட படிக்க முடியாமல் கேள்வித்தாளில் ஒன்றுமே தெரியவில்லை எனில் ஒயிட் செஸ்டநட். [Nervousness (fear அல்ல) in examination hall or during an interview.]

__Tail-piece__: (பின் குறிப்பு)

'அசோக்' என்ற மருந்து சிற்சில சமயங்களில் ஸென்ட்டாரி, சிக்கரி போல் தோற்றமளிக்கும். நெகடிவ் தன்மையில் இவன் புல்லுருவி போல் (மற்றவர் உதவியில், வீட்டில்) வாழ

விரும்புவான். 'அசோக்' ஸ்வீட் செஸ்ட்நட் போலும் தோற்றமளிக்கும். (விடை 39-ம் பக்கம்)

---

மாத சம்பளம் வாங்கும் ஒரு குடும்பஸ்தருக்கு (பரம்பரை சொத்து, வேறு வருமானம் இல்லாத நிலையில்) திடீரென்று வேலை போய்விட்டால் அவரது மனநிலை ஆஸ்பென் என்ற மலர் மருந்தின் நிலையாகும். இந்த மனநிலைக்கு இன்னுமொரு உதாரணம் ஓடத்தில் செல்லும் மனிதனுக்கு துடுப்பு கை நழுவி தண்ணீரில் அடித்து செல்லப்பட்ட நிலையாகும்.

மனோ பலம் - ஹார்ன்பீம்

மனோ தைரியம் - ஆஸ்பென்

ஸ்டெதாஸ்கோப் இல்லாத Allopathy டாக்டர், தர்ப்பை கட்டு இல்லாத ஐயர், இவர்களது மனநிலை ஆஸ்பென் மருந்துக்கு ஒத்து வரும். Licence இல்லாத Driver, Badge இல்லாத Auto ஓட்டுனர் - Aspen மனநிலை.

<u>ஆஸ்பென் மற்றும் சிக்கரி</u>. (முக்கியமாக குழந்தைகள் விஷயத்தில்) Chicory தேவைப்படும் குழந்தைகள் அம்மாவை தன்னை சதா தூக்கி வைத்துக் கொண்டே இருக்க சொல்லும். அல்லது அம்மா உட்கார்ந்து கொண்டு இருக்கும் பொழுது மடி மீது படுத்து இருக்கும். Aspen தேவைப்படும் குழந்தை அம்மாவை தொட்டுக் கொண்டோ, புடவை தலைப்பை பிடித்து கொண்டோ இருக்கும்.

| | |
|---|---|
| Desire for company | சிக்கரி |
| Fear of being alone | ஆஸ்பென் |

---

'வெட்கம்' என்பது ஆஸ்பெனில் வருகிறது.

ஒரு குழந்தையைப் பார்த்து நாம், அதனுடன் பேச்சு கொடுத்தால் அந்த குழந்தை முகத்தை திருப்பிக் கொண்டோ அல்லது நாணி கோணி அல்லது அம்மா பின் பக்கம் போய் மறைந்து கொண்டால் Aspen தேவை என்று அறிந்து கொள்.

(a) சரியான Tools இல்லாமல் ஒரு சாதனத்தை Repair செய்ய முயற்சிக்கிறான் Mechanism தெரியாத நெகடிவ் Oak Type நபர்.

(b) Mechanic ஒரு சாதனத்தை ரிப்போர் செய்ய கையில் Tools ஏதும் இல்லாமல் இருக்கும் பொழுது கை ஒடிந்தது போல் உணர்கிறான். இது ஆஸ்பென் தேவைப்படும் மனநிலை.

(c) தனியாக இருக்க முடியாமை என்ற நிலையில் துணையை நாடுகிறான் சிக்கரி. தானே செய்ய கூடிய அற்ப வேலைகளை கூட மற்றவர் செய்ய வேண்டும் என்று இவன் எதிர்பார்க்கிறான்.

(d) ஒரு Technical வேலை (தனக்கு தெரியாது, தன்னால் செய்ய முடியாது) என்பதால் அந்த Subject தெரிந்த Mechanic அல்லது அந்தரங்க காரியதரிசி போன்றவர்கள் இல்லாத பொழுது கை ஒடிந்தது போல் உணர்கிறான் - Aspen மனநிலை.

(e) வாட்டர் வயலெட்-டைப் நபர், தான் எதிர் பார்க்காத ஒரு சந்தர்ப்பத்தில், ஆனால் அந்த நிலையை சமாளித்து தான் ஆக வேண்டும் என்ற காலத்தின் கட்டாயத்தில் இருக்கிறான்.

(f) மேற்சொன்ன (d) மற்றும் (e) சேர்த்து படித்து பாருங்கள். வீட்டில் தண்ணீர் குழாய் ரிப்பேர் அல்லது மின்சாரக் கோளாறு என்ற சந்தர்ப்பங்களில் சரியான பிளம்பர் அல்லது எலக்ட்ரீஷன் கிடைக்காத பட்சத்தில் Water Violet மற்றும் Aspen சேர்த்து சாப்பிட சரியான மெக்கானிக் உங்கள் வீட்டு கதவை தட்டுவான். அது மட்டும் அல்ல. மிக மிக குறைந்த செலவில் வேலை செய்து தருவான். ஒரே கல்லில் இரண்டு மாங்காய்! இதுதான் பாட்ச் மலர் மருந்துகளின் மகிமை!

---

உடுக்கை யிழந்தவன் கைபோல் வாங்கே
இடுக்கண் களைவதா நட்பு.

நல்ல நண்பர்கள் பெற ஆஸ்பென்.

---

ஆஸ்பென் தேவைப்படும் நபர் சொல்லும் வார்த்தைகள்:

"கடவுள் என்னையெல்லாம் தெரியாமல் படைத்து விட்டான் போலும்..."

"நாமெல்லாம் பிறந்தே இருக்கக் கூடாது..."

"இராமர் ஆட்சி செய்த காலத்தில் நாம் இருந்திருந்தால்..."

"பிருந்தாவனத்தில் நந்த குமாரன்... அந்த நாளும் வந்திடாதோ. . .". ஆஸ்பென் சாப்பிட இராம இராஜ்ஜியம் இங்கே, இப்போதே உனக்கு வரும்.

Greed. பேராசை பிடித்தவர்களுக்கு ஆஸ்பென், ஒரு வயதானவர் பத்து இலட்சம் நோட்டு கட்டுகளாக வைத்து விட்டு இறந்து விடுகிறார். இரண்டு மகன்கள். மூன்று பெண்கள். பெரியவன் யாருக்கும் தெரியாமல் பத்து லட்சங்களையும் அமுக்கி விடுகிறான். இவனுக்கு ஆஸ்பென். (பணத்தை தன்னுடன் சேர்த்துக் கொள்கிறான்.). அதிக பணம் இருந்தால் 'பலம்' என்று நினைக்கிறான். பணத்தை திருடி விட்டு திருட்டு முழி முழிக்கிறான்.

கண்களால் தேடுவது எங்கெல்லாம் வருகிறதோ, அங்கெல்லாம் ஆஸ்பென்.

ஒரு அலுவலகத்தில் முதன் முறையாக உள்ளே செல்கிறாய். முழித்துக் கொண்டே பார்க்கிறாய். ஆனால் ஆஸ்பென் சாப்பிட்டு செல்ல சரியான நபர் உன்னை கூப்பிட்டு உனது நண்பன் போல் உனக்கு வேண்டியதை செய்து கொடுப்பார்.

கூட்டத்தில் திருடனை தேடும் போலீஸ்காரன் ஆஸ்பென் சாப்பிட 'லபக்' 'லபக்' என்று கொத்து கொத்தாக திருடர்களை பிடித்து விடுவார்.

மேற் சொன்னவற்றிலிருந்து நாம் தெரிந்து கொள்வது என்னவெனில் கண்ணால் தேடும் எல்லாவற்றிற்கும் (அது கிடைக்க) ஆஸ்பென்.

உனது தேடுதல் வேட்டை ஆஸ்பென் உடன் முடிவடைகிறது.

---

வாட்டர் வயலட் ஓர் குறிப்பு: ஆம்புலன்ஸ் மற்றும் தீயணைப்பு வண்டி சைரன் ஒலியுடன் சாலையில் வேகமாக செல்லும் போது வேறு எந்த வண்டி ஓட்டுநரும் ஆம்புலன்ஸ் வண்டியை முந்த முயற்சிக்க மாட்டார்கள்.

ஒரு வழிப்பாதையில் (one-way) எதிர் திசையில் வண்டிகள் செல்வது தவறு என்றாலும் ஆம்புலன்ஸ் அவ்வாறு செல்லும் போது எல்லோரும் ஒதுங்கி வழி விடுவர். வாட்டர் வயலட் டைப் நபர் என்பது ஆம்புலன்ஸ் போல் எவரையும் கேட்காமலேயே தனக்கு சட்டம் வகுத்துக் கொள்கிறார். (காட்டு தர்பார் அல்ல. ஏனெனில் இவர் தன்னைப் பற்றி நினைப்பதே இல்லை. சுய நலத்துடன் அல்லது தனக்காக ஒருவர் செயல்படும் போதுதான் தவறுகள் வர வாய்ப்பு அதிகம்.)

## இப்போது மஸ்டர்டு என்ற மலர் மருந்து பற்றி படிப்போம்

(1) இம்மருந்து பற்றி படிப்பவர்களை அதிர்ஷ்டசாலி என்றே நாம் சொல்ல வேண்டும்.

(2) இம் மருந்து பற்றி படிக்க ஆரம்பிக்கும் முன்பு மட்டும் ஒரேயொரு டோஸ் ஒயிட் செஸ்ட்நட் சாப்பிட்டு, பிறகு படிக்க மனதில் பதியும். புரியும்.

உயிரோட்டம் — பாசம் — Affection — நெருங்கிய உறவு — Relationship — Near blood relation — பங்காளி, தாயாதி சண்டை — Strike in factories, offices — colleague — classmate — close friend — Intimacy — Human element, Humanism, Human relations — PRO — Personnel Officer — Student - teacher, boss - employee, employee - employer relationship — உறவு. போகின்ற உயிர் திரும்பி வர - இடி தாங்கி — மரணப் பேராட்டம் — ஊனம் — gangrene — amputation — எலும்பு முறிவு — அங்க ஹீனம்

உறவு முறை — மன இறுக்கம் — அதிர்ஷ்டம் — கேட்டதெல்லாம் கொடுக்கும் காமதேனு — வளர்ப்புப் பிராணிகள்.

மஸ்டர்டு நெகடிவ் தன்மையில் காரணம் இல்லாமல் அளவு கடந்த துக்கத்தில் மூழ்கி விடுகிறான். இது சில மணிநேரம்

இருந்துவிட்டு தானகவே மறைந்து விடும். இவ்வாறு அடிக்கடி வரும். இந்த ஆழ்ந்த சோகத்திற்கு சரியான ஆங்கில வார்த்தை Gloom. ஒரு நபருக்கு மஸ்டார்டு தேவை என்பதை நாம் எப்படி தெரிந்துகொள்ளலாம் என்றுல், இவரைப் பார்த்து மற்றவர்கள் சொல்லும் வார்த்தைகளை வைத்துத்தான். "ஏண்டா, தலையில் இடி விழுந்தது போல் இருக்கிருய்?" அல்லது "ஏண்டா, கப்பல் கவிழ்ந்ததுபோல் முகத்தை வைத்துக்கொண்டிருக்கிருய்?" இதற்கு அந்த நபர் "ஒன்றுமில்லையே" என்று மட்டும் பதில் சொல்வான். தான் துக்கமாக இருப்பதை அவனுல் உணர முடிவதில்லை. ஏனெனில் அவன் ஆழ்ந்த துக்கத்தில் மூழ்கி அதில் ஒரு பகுதியாக ஆகி விடுவதால் அவனுல் தன்னை அதிலிருந்து பிரித்து பார்த்து புரிந்து கொள்ள முடிவதில்லை.

ஆஸ்பென் என்ற மருந்தில் காரணமில்லாத சாதாரண பயம் விட்டு விட்டு வரும். ஒரு முறை வந்தால் ஒரு சில மணி நேரம் இருந்துவிட்டு அதுவாகவே மறைந்து விடும்.

ராக் ரோஸ் என்ற மருந்தில் அளவு கடந்த பயம்.

ஜென்ஷன் என்ற மருந்தில் ஒரு காரணத்தை முன்னிட்டு (எதிர்பார்த்தது கிடைக்காமல் போவதால்) ஏமாற்றம் சாதாரண துக்கமாக வெளிப்படுகிறது.

மஸ்டார்டு - இதில் காரணமில்லாமல் அளவு கடந்த சோகம் அடிக்கடி வந்து போகிறது.

ஒரு மருந்தின் நெகடிவ் தன்மையில் இருந்தே நாம் அதன் பாஸிடிவ் தன்மைகளை ஊகிக்க முடியும்.

மஸ்டார்டு என்ற மருந்தில் நெகடிவ் தன்மை என்பது அளவு கடந்த துக்கம் எனில், அதன் பாசிடிவ் தன்மையாக லாட்டரியில் அல்லது ஏதோ ஒரு வழியில் ஐம்பது கோடி கிடைத்த ஒருவரின் மனநிலையை கூறலாம். அளவு கடந்த, மனசு பூராவும் நிரம்பிய திருப்தி. குபேர சம்பத்து (பல கோடிக்கு அதிபதி).

தினம் எட்டு மணிநேரம் என மாதம் முழுவதும் உழைத்தால், பத்து அல்லது முப்பது ஆயிரம் சம்பளம் கிடைக்கும். இவன் வாழ்நாள் முழுவதும் உழைத்தால் கூட பத்து கோடி ரூபாய்க்கு அதிபதியாக முடியாது.

ஒரு மணி நேர வேலைக்கு ஐந்து முதல் ஐம்பது இலட்சம்

ரூபாய் சம்பாதிப்பவனால் மட்டுமே ஆயிரம் கோடி ரூபாய்க்கு அதிபதியாக முடியும். உலகில் அப்படி எவராவது இருந்திருக்கிறார்களா என்று கேட்டால், அதற்கு பதிலாக மோனலிசா ஓவியம் படைத்த ஓவியன் பிக்காஸோவைச் சொல்லலாம். நாம் வாழ்நாள் முழுவதும் உழைத்து சேமித்தால் கூட பிக்காஸோ ஒரு நாள் நேரம் செலவழித்து தீட்டிய ஒரு ஓவியத்தை கூட விலை கொடுத்து வாங்க முடியாது. அவரது ஓவியங்கள் ஒவ்வொன்றும் ஐந்து முதல் ஐம்பது இலட்சம் வரை இன்றைக்கும் விலை போகின்றன.

தினசரி, வார, மாத பத்திரிகைகளில் ஓவியம் வரைபவர் களுக்கும் பிக்காஸோவிற்கும் என்ன வேறுபாடு வெனில், பிக்காஸோ வரைந்த ஓவியங்களில் 'உயிரோட்டம்' இருக்கிறது. மற்ற ஓவியர்கள் வரைவது பொம்மை போல இருக்கும்.

பழங்கால கோயில் சாமி சிலைகளைக் கடத்தி பல இலட்சம், கோடிகளுக்கு விற்பனை செய்கிறார்களெனில் அதற்குக் காரணம் அந்த சிலைகளில் உயிரோட்டம் உள்ளது. அதாவது, அக்காலத்தில் சிலை செய்தவர்கள் எல்லோரும் பாசிடிவ் மஸ்டர்டு டைப் நபர்களாக இருந்ததே இதற்குக் காரணம்.

அப்படியெனில் இன்றைய தேதியில் உள்ள ஓவியர்கள், சிலை வடிப்பவர்கள் மஸ்டர்டு சாப்பிட்டு வர அவர்களது படைப்புகளில் உயிரோட்டம் உண்டாக்கி பிக்காஸோ போல் கோடீஸ்வரராகி விடுவார்களா எனில் 'ஆமாம்' 'ஆமாம்' என்றே நாம் பதில் சொல்ல வேண்டும்.

ஆனால் அவர்கள் நாம் சொல்வதை நம்ப மாட்டார்கள். ஆகையால் இங்கிலாந்து மலர் மருந்துகள் பற்றி தெரிந்த நாமே ஓவியக் கல்லூரி (தபால் வழி) சேர்ந்து படித்து (முதல் 1-3 மாதங்கள் 'செஸ்ட்நட்பட்' மற்றும் 'வால்நட்' இரண்டு நாட்களுக்கு ஓர் முறை ஒரு டோஸ் சாப்பிட்டு ஓவியக்கலையில் தேர்ச்சி பெற்று) அதன்பின் இதேபோல் மஸ்டர்டு சாப்பிட்டு வந்து பிக்காஸோ போல் ஆகி அதன் பிறகு பத்திரிகை பேட்டியின்போது நாம் முன்னுக்கு வந்ததன் இரகசியம் மஸ்டர்டு தான் என்று சொல்ல, இதன்பின் ஓவியர், சிலை வடிப்பவர் மஸ்டர்டு பற்றி நம்பி அதை சாப்பிட ஆரம்பிப்பர்.

ஓவியம் 'எழுதுகிறான்' - குமுதம், ஆனந்த விகடனில்

வேலை செய்யும் ஓவியன்

ஓவியம் 'படைக்கிறான்' - பிக்காஸோ

'உயிரோட்டம்' என்பது மஸ்டர்டு-ல் வருகிறது என பார்த்தோம். இந்த வார்த்தை எங்கெங்கெல்லாம் வருகிறதோ அங்கெல்லாம் மஸ்டர்டு உபயோகப்படும்.

உடலில் இரத்த ஓட்டம் இருக்கும் வரை தான் உயிர் இருக்கும். உயிர் பிரிந்தால் இரத்தக் குழாய்களில் இரத்தம் உறைந்து அதன் ஓட்டம் நின்று விடும்.

ஆகையால் இரத்த பந்தம் (near blood relation) அல்லது பாசம் (affection) என்பதும் மஸ்டர்டு என்ற மருந்தில் வருகிறது.

'பணமா? பாசமா?' என்றால் பாசம் தான்.

பாசம் என்ற 'பாசிடிவ்' தன்மை இல்லாமல் போகும் போது அதன் 'நெகடிவ்' தன்மையாக சொந்தக்காரர்கள் மீது வெறுப்பு வருகிறது. ஒருவனை எவராவது ஐயாயிரம் ரூபாய் ஏமாற்றி விட்டான் என்றால் அதனால் அவன் மனம் பாதிக்கப்படுவதைவிட, தனது சொந்தக்காரன் ஏமாற்றி விட்டால் பாதிப்பு, கோபம் அளவுக்கதிகமாக வரும்.

"அண்ணன் - தம்பி நெடும் பகையாளி."

பாசம் (affection) என்பது நெருங்கிய உறவினர் மீது மட்டுமல்லாது, எங்கெல்லாம் நாம் ஒருவருடன் நீண்ட நாட்கள் நெருங்கி பழகுகிறோமோ அங்கெல்லாம் வருகிறது. பள்ளி/ கல்லூரி வகுப்பு தோழன் (Classmate), தெரு நண்பன் (Streetmate), வியாபாரத்தில் businessmate, அலுவலகத்தில் சக ஊழியர் (colleague). மற்றும் நெருக்கமான தொடர்பு (நெருக்கமான தொடர்பை 'உறவு' என்று குறிப்பிடுகிறோம்) வரும் இடம் ஆசிரியர் - மாணவரிடையே, டாக்டர் - நோயாளி, எஜமான் - வேலைக்காரன் இடையே, Tourist-guide, வியாபாரி - அவனது வாடிக்கையாளர். இந்த உறவுகளில் 'நம்பிக்கை' (trust) வலுவாக ஆகிறது. டாக்டர் - நோயாளி என்ற உறவில் இது இன்னும் அதிகம்.

ஆகையால் பங்காளி அல்லது தாயாதி சண்டை, பாகப் பிரிவினை, ஆசிரியர் அல்லது மாணவர் ஸ்ட்ரைக், தொழிலாளர் ஸ்ட்ரைக், கடையடைப்பு, ஆட்குறைப்பு, லாக் அவுட், சம்பள

உயர்வு கேட்டு போராட்டம். இவை மஸ்டார்டு என்ற மருந்தின் நெகடிவ் தன்மைகள். இங்கெல்லாம் மஸ்டார்டு உபயோகப்படும்.

பள்ளி வகுப்பு தோழன் என்ற உரிமையை அல்லது சம்மந்தி என்ற உறவு கடையில் எவ்வளவு காசு கொடுத்தும் வாங்கி விடக் கூடிய விஷயம் அல்ல.

பரம்பரை சொத்தில் சகோதர, சகோதரிகளிடையே சண்டை வந்தால் சொத்தில் உரிமை உள்ள எல்லோருக்கும் மஸ்டார்டு கொடு. எவ்வளவு அன்யோன்யமாக ஆகின்றனர் பார். நல்லதொரு குடும்பம் பல்கலைக் கழகம் ஆக, மஸ்டார்டு.

நட்பு/உறவு என்றவுடன் அல்லது முதலாளி-தொழிலாளி என்றவுடன் 'உரிமை' என்பது வருகிறது. சம்பளம் பெற வேண்டியது தொழிலாளியின் உரிமை என்றால் அந்த அளவு வேலை வாங்கிக்கொள்ள முதலாளிக்கும் உரிமை உண்டு.

ஒரு கம்பெனி நஷ்டத்தில் ஓட ஆரம்பித்தவுடன் (அதை முன்னுக்கு கொண்டு வர) அதன் தொழிலாளிகள் இலவசமாக ஓவர்-டைம் செய்தனர். (இது மஸ்டார்டு பாசிடிவ் தன்மை) இது நடந்தது சத்தியமாக இந்தியாவில் இல்லை. ஜப்பானில் நடந்தது. அவர்கள் பாசிடிவ் தன்மையாளர்கள்.

உற்பத்தி, அதிகமாகி இலாபம் வரும் போது போனஸ் கேட்டு பெறுவது போல், நஷ்டத்தில் ஓடும் போது ஓவர்டைம் சம்பளமில்லாமல் செய்வதுதானே நியாயம்!

ஒரு தொழிற்சாலை அல்லது அலுவலகம் ஆரோக்கியமாக செயல்பட முதலாளி-தொழிலாளி உறவு சுமுகமாக இருப்பது முதல் தேவை மற்றும் அவசியம். வாரம் இரண்டு தடவை குடிக்கும் தண்ணீரில் மஸ்டார்டு கலந்து வைக்க (முதலாளியும் இதை சாப்பிடுவது அவசியம்) ஸ்ட்ரைக், போராட்டம், லாக்-அவுட் ஆகியவற்றிற்கு இடமில்லாமல் போய் ஜப்பான் போல் நமது நாடும் உயரும்.

பல்கலைகழகத்தில் (university) பி.எச்.டி.க்கு thesis முடிப்பதற்குள் guide ஆக நியமிக்கப்பட்டவன் அந்த மாணவன்/மாணவியை தன் சொந்த வேலைகள் செய்ய ஒட்ட ஒட்ட கசக்கிப் பிழிந்துவிடுவதைப் பார்க்க மிக பரிதாபமாக இருக்கும். இதற்கு மஸ்டார்டு.

நமது பள்ளி/கல்லூரி ஆசிரியர்களுக்கு எல்ம், மஸ்டார்டு, செஸ்ட்நட்பட் கொடுத்து மாணவர்களுக்கு செஸ்ட்நட்பட், மஸ்டார்டு கொடுக்க நம் நாட்டு கல்லூரிகள் கேம்பிரிட்ஜ், ஆக்ஸ்போர்டு போல் அகில உலக அளவில் நம்பர் ஒன் ஆகிவிடும்.

இங்கு இயற்கை சொல்லும் ஒரு இரகசியத்தை எழுத விரும்புகிறோம். மூவாயிரம் மட்டுமே சம்பளமாக வாங்கும் ஒரு கிளார்க் ஏழாயிரம் வாங்கும் தனது ஹெட் கிளார்க்கைப் பார்த்து ஏக்கப் பெருமூச்சு விடுகிறான்.

ஆனால் இயற்கை சொல்கிறது, "நான் உன்னை இந்த அலுவலகத்தில் வேலை செய்யும் சந்தர்ப்பம் ஏன் கொடுத்தேன் எனில் அங்கு கொடுக்கப்படும் வெறும் மூவாயிரத்திற்காக அல்ல. உனக்கு போனஸாக அங்கு வேலை செய்யும் சக ஊழியர்களின் தொடர்பு, நட்பு அல்லது நெருக்கமான (intimate acquaintance) என்பது பத்தாயிரத்திற்கு மேல் மதிப்பு உள்ளது. நீ தினம் அலுவலகம் செல்லும் முன்பு மஸ்டார்டு மற்றும் ஹீதர் சாப்பிட்டு வர, அவர்கள் தனக்குத் தெரிந்த வேறு சில விஷயங்கள் உன்னிடம் சொல்ல, அதை நீ பின்பற்றி, தினம் அரை மணிநேரம் மட்டுமே வேலை செய்து மாதம் பத்தாயிரத்திற்கு மேல் ஆட்டோமேடிக்காக சம்பாதிக்க ஆரம்பித்து விடுவாய் - Nature knows no economics. Nature's ways are always short. More servants wait on man than he will take notice of.

குழாயடி சண்டை, தெருச் சண்டை, அக்கம் பக்கத்து சண்டை, குடும்பத்தில் சச்சரவு, ஸ்ட்ரைக், இவற்றிற்கெல்லாம் மஸ்டார்டு.

கம்சன் மற்றும் ஹிரண்ய கசிபுக்களுக்கு மஸ்டார்டு

துரியோதனர்களுக்கு மஸ்டார்டு

கைகேயிக்கு மஸ்டார்டு

பாசம் மறைந்தால் கொடுமை, கொடுங்கோல்தான்

கொடுங்கோல் மன்னர்களுக்கு

சதாம் உசேனுக்கு

கிட்னி திருடும் டாக்டர், பணத்திற்காக வேண்டுமென்றே

சிசேரியன் செய்யும் டாக்டர்கள், பிணத்திற்கு வைத்தியம் செய்த கோவை ஹாஸ்பிடலுக்கு மஸ்டர்டு.

சேர, சோழ, பாண்டியர்களுக்கு (எல்லோரும் தமிழர் என்றாலும் அவர்களிடையே எப்போதும் சண்டைதான்.)

Border dispute. அண்டைநாட்டு எல்லை தகராறுக்கு மஸ்டர்டு. குரோதம் மாறி உண்மை அன்பு நிலவ.

ஃபியட் காரின் சிறப்பு என்ன வெனில் மெக்கானிக்குகள் சொல்வர்: 'குழந்தை மாதிரி ஓடிவரும்.' ஒரு குழந்தையை நீ கூப்பிட்டவுடன் எவ்வித தயக்கமுமில்லாது வருவது போல் பியட்கார் ஓட்டுவது அவ்வளவு எளிது. அதில் (அதன் தயாரிப்பில்) உயிரோட்டம் உள்ளது.

மாணவன் கொடுக்கும் கட்டணம் (fees) வாங்குவதில் என்ன சந்தோஷம் ஒரு வாத்தியாருக்கு இருக்குமோ அதைப்போல ஆயிரம் மடங்கு சந்தோஷம் "என்னிடம் படித்தவர்கள் இன்று நாட்டின் ஜனாதிபதியாக, அரசின் மிகப்பெரிய உத்தியோகத்தில் உள்ளனர்" என்று சொல்வதில் தான்.

தமிழக முதன்மந்திரி ஜெயலலிதா சர்ச் பார்க் கான்வெண்ட்-ல் படித்தவர் என்றால் அந்த பள்ளிக்கு எவ்வளவு பெருமை!

பாசமில்லாதவன் மிருகத்திற்கு சமம்.

நண்பரை ஏமாற்றினால் அதை நம்பிக்கை (trust) துரோகம் என்கிறோம். வியாபாரி வாடிக்கையாளரை ஏமாற்றுவது, ஒரே தொழிலில் உள்ள சகபாடிகளை (colleague) ஏமாற்றுவது இவற்றிற்கு மன்னிப்பே கிடையாது.

ஒருவனுக்கு கொடுத்த வாக்குறுதியை காப்பாற்றாமல் இருப்பதில் உள்ள பாவத்தைவிட நெருங்கிப் பழகிய நண்பரை ஏமாற்றுவது, முதலாளி தொழிலாளியை ஏமாற்றுவது, கணவன் மனைவி ஒருவரையொருவர் ஏமாற்றுவது, சொந்தக்காரர்களை ஏமாற்றுவது குருதுரோகம், தொழிலில் கூட்டாளியை ஏமாற்றுவது ஆகியவை, நடக்கக் கூடாத ஒன்று. இதற்கு மன்னிப்பே இல்லை. இவ்வாறு செய்பவன் தான் மட்டும் இல்லாமல் தனது குழந்தைகளையும் நரகத்தில் தள்ளுகிறான். இவர்கள் தான் புயல், பூகம்பம், எரிமலைகளை உண்டாக்குகின்றனர்.

இவற்றை எள்ளளவும் செய்யாமலிருந்தாலே விரைவில் கோடீஸ்வரன் ஆகிவிடுவது நிச்சயம்.

தென்னை மரத்தில், நெற்கதிரில் வேப்பங்காய் காய்த்தால் நம் நிலை என்னவாகும்? சற்று யோசித்துப் பாருங்கள். பசு, எருமை மாடு பாலுக்கு பதிலாக விஷத்தை கொடுத்தால்?

மழை தண்ணீராக இல்லாமல் அமிலமாக...

"எந் நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை பெற்றோர், மாணவர், ஆசிரியர், நண்பர், வாடிக்கையாளர், சொந்தக்காரர்களை ஏமாற்றியவர்களுக்கு"

என்று புதிய குறள் மஸ்டர்டு பற்றி புரிய நாம் எழுத வேண்டும்.

---

வறுமையில் தற்கொலை - செர்ரி ப்ளம்

சில ஆயிரம், இலட்சம் கடன் தொல்லை தாங்காமல் தற்கொலை செய்து கொள்கிறான் - அக்ரிமனி

பல கோடி பணம் மற்றும் உயிர் ஓட்டம் என்பதை மனதில் வைத்துக் கொண்டு நாம் படித்தால்,

பல கோடிகள் இருந்தால்தான் வாழ்வு, இல்லாவிட்டால் சாவு என்ற நிலையில் தள்ளப்பட்ட ஜீ.வீ. (G. வெங்கடேஸ்வரன்) என்ற தமிழ் சினிமா உலக படாதிபதி பல கோடி கடனாளியாகி தூக்கில் தொங்கினான். ஒரு வேளை இவன் அச்சமயத்தில் மஸ்டர்டு சாப்பிட்டிருந்தால் பல கோடி எப்படியோ வந்து கொட்டோ கொட்டு என்று கொட்டியிருக்கும். ஷேர் மார்க்கெட்டில் ஹர்ஷத் மேத்தா காலங்களில் கோடியாக சம்பாதிக்கலாம் என்று ஆசைப்பட்டு பல லட்சங்கள் கடன் வாங்கி ஷேரில் போட்டவர்கள் மார்க்கெட் ஒரேயடியாக விழுந்தவுடன், கடனை திருப்ப முடியாமல் தூக்குப் போட்டு இறந்தனர்.

நீ ஏண்டா ஷேர் மார்க்கெட்டில் ஏமாறுகிறாய்? அது விட்டில் பூச்சி மாதிரி. இங்கிலாந்து காடுகளில் உள்ள மஸ்டர்டு சாப்பிட்டு உன் திறமையை உயர்த்தி வேலையில் உயிரோட்டம் வந்து கோடி கோடியாக சம்பாதித்துக்கொள் என்கிறது இயற்கை.

